உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!

பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.




**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலக முழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

சோபகிருது, பங்குனி 16 ★ மார்ச் 29






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

பட விளக்கம் 35-ம் பக்கம் பார்க்க

# அறிந்தீர்களா?
# இதுதான் உங்கள்
# பனாமா




1 தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பலனாக தண்மையான புகைநயம்—அதுவே உங்கள் பனாமா!

2 நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரகமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

3 நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

4 இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டுகளுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது பனாமா

கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.  பம்பாய்-56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT. (P) 635 A TH Greens' Advtg.



மலர் 23 | இதழ் 35

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# முதன் மந்திரியின் தடுமாற்றம்

‘முன்புறம் பார்த்தால் ராவுத்தர் குதிரைபோலிருக்கிறது; பின்புறம் ராயர் குதிரைபோலிருக்கிறது’ என்று ஒரு கதை சொல்வார்களே, அந்த ரீதியில் பேசுகிறார் முதன் மந்திரிகளின் மகாநாட்டுக்காகத் தில்லி சென்று திரும்பியுள்ள ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர் தேர்வுக்காக ஹிந்தியில் பரீட்சை நடத்தினால் தமக்கு ஆட்சேபனையில்லையென்று, வடக்கத்தியர்களுக்குத் திருப்தியளிக்கும் வகையில் பேசியிருக்கிறார்! அதேசமயம், தமிழ்நாட்டில் ஹிந்தியைக் கட்டாய பரீட்சைக்குரிய பள்ளிப் பாடமாக்க முடியாது என்று தமிழ் நாட்டிலுள்ளவர்களுக்குத் திருப்தியளிக்கும் வகையிலும் பேசியிருக்கிறார். அகில இந்திய பொதுப் பரீட்சைகளில் ஹிந்திக்கு ஸ்தானம் அளிப்பதைப்போல் சமநீதிக்குப் பங்கம் விளைவிக்கும் காரியம் வேறு எதுவுமில்லை. இதனால் ஹிந்தியைத் தாய்மொழியாகப் பெற்றவர்கள் பரீட்சைகளை எளிதில் எழுதித் தேர்ச்சி பெற்றுத் தமிழகத்துக்கு வந்து ‘துக்ளக்’ தர்பார் நடத்த வசதி ஏற்படும்.

ஹிந்தியர்களோ, அல்லது ஹிந்தி மோகம் கொண்டவர்களோ தான் ஹிந்தி விடைத் தாள்களைத் திருத்துவார்கள். இந்நிலையில் பரீட்சை முடிவுகள் எப்படிப் பட்சபாதமின்றி இருக்க முடியும்? ஒருவருக்கு வெண்ணெயும் மற்றவருக்குச் சுண்ணாம்பும் வழங்கும் ஏற்பாட்டுக்கு ஸ்ரீ பக்தவத்ஸலம் தலையாட்டிவிட்டு வந்திருப்பது நமது மகத்தான துரதிர்ஷ்டம்.

இரண்டு மொழிகளில் எழுதப்படும் விடைத்தாள்களைப் பொதுவான ஒரே அடிப்படையில் மதிப்பிடுவது இயலாத காரியம். சாத்தியபூர்வமில்லாத இந்தப் பொது அடிப்படைக்காகத்தான் தீவிரமாக முயல்கிறார் நமது முதன் மந்திரி! மொழி விஷயத்தில் ‘ராஜி’த் திட்டங்கள் எதுவுமே பாரபட்சத்தில்தான் முடியும். ஹிந்திப் பரீட்சாதிகாரிகள் இயற்கைக்கு விரோதமாக நேர்மையாக நடந்துகொண்ட போதிலும் குற்றச்சாட்டு, சந்தேகம், அச்சம் எல்லாம் இருக்கத்தான் செய்யும். பப்ளிக் சர்வீஸ் கமிஷனில் இவை புகுவதற்கு இடம் தரலாமா? ஆங்கிலம் மட்டும் இருப்பதால் யாருக்கும் எந்தப் பிரதிகூலமும் கிடையாது. ஹிந்தியும் சேர்வதால் சிலர் நிச்சயமாக இடர்ப்பாடு அடைவார்கள். ஆனபடியால், ராஜி யோசனைகளை மறந்து ‘ஆங்கிலம் மட்டுமே வேண்டும்’ என்று முதன் மந்திரி அடித்துச் சொல்ல வேண்டும். இல்லாவிடில் ஹிந்தி ஐ. ஏ. எஸ்கள் இங்கிலீஷ் ஐ. ஏ. எஸ்கள் என்றும் மற்ற எல்லாப் படிகளிலும் இரண்டு ஜாதிகள் தோன்றும். சர்க்கார் உத்தியோகத்தில் புது ஹரிஜன ஜாதியைச் சிருஷ்டிக்கும் மேலிடத்து யோசனையை நம் முதன் மந்திரி தடுத்தே ஆகவேண்டும்.

தமிழைக் கல்லூரி மொழியாக்கும் விஷயத்தில் உணர்ச்சி வசப்படாமல், இளைஞர்களின் எதிர்கால நலனைக் கருதி விவேகமாகவும் நிதானமாகவும் செயலாற்றிவரும் நமது முதன் மந்திரி அவர்கள், ஆட்சிமொழி விஷயத்தில் ஹிந்தியர்கள் உணர்ச்சிவசப்பட்டு, நிதானமில்லாமல் எடுக்கும் அவிவேகமான முடிவுக்கு எப்படி ஒப்புகிறார் என்பது விளங்காத மர்மமாக இருக்கிறது. போதனை மொழிக்கு ஒரு முடிவு, ஆட்சிமொழிக்கு வேறு முடிவு என அவர் ஏன் தடுமாறுகிறார்? தமிழகத்தின் அமைச்சரவைக்குத் தலைமை தாங்கும் அவரது முதல் கடமை தமது நாட்டு மக்களுக்கே; பிற்பாடுதான் கட்சி. எனவே தவறு என்று அவரே உள்ளூற அறிந்திருக்கக்கூடிய ஒரு முடிவைக் கட்சியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு அவர் ஆமோதிப்பது சிறிதும் அழகல்ல. முதன் மந்திரி அவர்கள் இனியாவது ராஜ்ய மக்களின் நலனைக் காத்துத் தரத் தைரியமாக முன்வர வேண்டும்.

# ஈழத்தில் புதுத் திருப்பம்

அண்டை நாடான இலங்கையானது இந்தியருக்கு ஒரு பெரிய ஆறுதலாக இருந்து வருகிறது என்றால் அது அதிசயமாகத் தோன்றும். ஆனால் நம் நாட்டில் நடக்கும் பல முறைகேடுகளைப் பார்த்து மனம் பொருமும் போதெல்லாம் அதே முறைகேடுகள் இலங்கையிலும் நடப்பதைக் கண்டு, 'இந்தியா மட்டும் தவற்றில் தனியாக இல்லை' என்று ஓர் அசட்டு ஆறுதல் உண்டாவதுண்டு. சர்க்கார் சர்வாதிபத்திய வெறி, உள்ளூர்ச் சண்டைகளைக் கவனியாமல் உலக சமாதானத்தைப் பறைசாற்றுவது — இவை இரு நாட்டு அரசாங்கங்களுக்கும் பொதுவான குணங்கள். மொழி விஷயத்தில் கேட்கவே வேண்டாம். இலங்கையின் பாரபட்ச மொழிச் சட்டங்கள் காட்டும் வழியிலேதான் இன்று பாரத அரசாங்கம் செல்கிறது. அல்லது இந்தியாவில் நடைபெறும் ஹிந்தி ஆதிக்க முறையில் இலங்கையர் சிங்கள பாஷை ஆதிக்கத்தை ஏற்படுத்த முயல்கிறார்கள் என்று வைத்துக்கொண்டாலும் சரியேயாகும். எப்படியானாலும் இலங்கைத் தமிழர்கள் அநுபவிக்கும் இன்னல்களை இந்தியத் தமிழர்களே அநுபவிக்கும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறாகத் தாறுமாறாக ஆட்சி நடத்தி வரும் இலங்கையில் இப்போது ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தில் நம் இந்திய சர்க்கார் ஒருகாலும் இலங்கையைப் பின்பற்ற முடியாது. ஏனெனில் முதலாவதாக, அநாவசியப் பிரச்னைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்தபடியால் நாட்டின் அடிப்படை நன்மைகளை அரசாங்கம் கவனிக்க முடியவில்லை என்பதை ஸ்ரீமதி சிரிமாவோ அம்மையார் உணர்ந்திருக்கிறார். இலங்கையின் பொருளாதாரம் பாழாகிவிட்டதென்றும், அதனைச் சீர்செய்வதே தேசத்தின் முதல் தேவை என்றும், அதுவரை இதர பிரச்னைகளை இரண்டாந்தரமாகத்தான் கருத வேண்டும் என்றும் அவர் உணர்ந்திருக்கிறார். இத்தகைய விழிப்பை இந்திய ஆட்சியாளரிடம் ஒருபோதும் எதிர்பார்க்க முடியாது.

இரண்டாவதாக, பாரத சர்க்காருக்கு எதிர்க் கட்சிகளைக் கண்டாலே கரிப்பாக இருக்கிறது. அவர்களும் தேச முன்னேற்றத்தில் ஈடுபாடு உள்ளவர்கள் என்று நம்பி, ஒத்துழைக்க இந்திய அரசாங்கம் என்றுமே தயாரில்லை. ஆனால் ஈழத்துப் பிரதமர் சிரிமாவோ அம்மையார் தேசத்தின் பொருளாதார நெருக்கடி தீர வேண்டுமானால் எல்லா அரசியல் கட்சிகளும் ஒன்று கூடிச் சர்க்கார் அமைத்து ஏகோபித்த முடிவுகளின் மூலம் முன்னேற்றம் காண வேண்டும் எனக் கருதுகிறார். சர்வ கட்சி அரசாங்கம் நிறுவ வேண்டுமெனக் கருதுகிறார். இதன் நடைமுறை சாத்தியக் கூறுகள் எவ்வாறாயினும், ராணுவ நெருக்கடியின் போதுகூட பாரத சர்க்கார் எதிர்க் கட்சிகளை நம்ப மறுக்கையில், பொருளாதார நெருக்கடி தீருவதற்காக எதிர்க் கட்சிகளுடன் ஒத்துழைக்க முன்வந்துள்ள ஈழப் பிரதமரைப் பாராட்டுகிறோம்.

# யார் பெரிய எதிரி?

பாகிஸ்தானும் பாரதமும் சமாதானமாக வாழும் நாள் ஒருபோதும் ஏற்படாது என்றே நினைக்க வேண்டிய நிலை ஏற்பட்டு வருகிறது. பாகிஸ்தானின் அக்கிரமங்களும், அதிக்கிரமங்களும் ஒரு புறம் இருக்கட்டும். சமாதானத்துக்காகப் பாரத சர்க்கார் எந்த அளவுக்கு முயன்றிருக்கிறது என்று நோக்கினால் ஏமாற்றமே உண்டாகும். காச்மீர்ப் பிரச்னை தீர நாம் உருப்படியான ஒரு யோசனையும் சொல்லவில்லை. ஐ. நா. சபையில் இப்பிரச்னை தீராமல் இழுத்துப் பறித்துக் கொண்டிருந்தால் அதையே நம் வெற்றி என்று மார் தட்டிக் கொள்கிறோம்.

சீனாவை விடப் பாகிஸ்தானைப் பெரிய விரோதியாக நினைத்துக் காரியங்கள் நடக்கின்றன. சீனாவுக்காக நமது பிரதமர் விட்டுக் கொடுத்தது கொஞ்சநஞ்சமல்ல. மக்மாஹன் எல்லைக் கோட்டை நெருங்க மாட்டோம் என்று கூட அவர் இலங்கைப் பிரதமர் மூலம் சீன சர்க்காருக்கு வாக்குறுதி தந்திருக்கிறார். ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் ஸ்ரீ மஸானிக்கு எழுதிய கடிதத்திலிருந்து இந்த விஷயம் தெளிவாகி விட்டது. மஸானியின் குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்று முன்பு வெளி விவகார இலாகா மறுத்தது தவறு என்று நிரூபணமாகி விட்டது. எனினும்,



சென்னை நகரசபையின் புதிய மேயர் திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் உதவிமேயர் கபாலமூர்த்தி அவர்களுக்கும் நமது மனமார்ந்த நல்வாழ்த்துக்களை அளிக்கிறோம். அவ்விருவரும் இந்தப் பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மறு நாள், முன்னாள் மேயர் திரு முனிசாமி அவர்களோடு சென்று ராஜாஜியை அவரது இல்லத்தில் சந்தித்து ஆசி பெற்றனர்கள்.

---

மக்களை ஏமாற்றிப் பிரதமர் இவ்வாறு ஒரு நடவடிக்கை எடுத்திருக்கிறார் என்பதைப் பளிச்சென்று பிரகரித்துக் கண்டிப்பதற்குக் கூட நம் நாட்டில் ஒரு தினசரிப் பத்திரிகையும் இல்லை.

மக்மாஹன் எல்லையை நெருங்கமாட்டோம் என்று சீனவுக்கு வாக்கு தந்த அதே பிரதமர் இப்போது பாகிஸ்தான் விஷயத்தில் போர்க்கோலம் பூண்டு, அவசியமானல் காச்மீரப் போர் நிறுத்த எல்லைக் கோட்டைக் கூடத் தாண்டுவோம் என்கிறார்! இரு முனைகளில் போர் உண்டாக்கிக் கொள்ளாமல் நம்முடைய நாட்டின் க்ஷேமத்தைப் பலப்படுத்தும் முறையில் வெளிநாட்டு நட்புக்களைச் சம்பாதிக்க வேண்டியதே இன்றைய பிரச்னை. இதில் யாரும் கருத்து செலுத்துவதாகக் காணப்படவில்லை.

# என்ன சேதி?

## பர்மாவில் இந்தியர்

பர்மாவின் தலைநகரான ரங்கூனில் சுமார் 3000 கடைகளைச் சர்க்கார் உடைமையாக்கிக் கொண்டு விட்டனர். இக்கடைக்காரர்கள் வியாபார நிமித்தம் வாங்கியுள்ள கடன்களுக்குச் சர்க்கார் பொறுப்பு ஏற்காது என்று கூறியிருக்கின்றனர். இனி, வியாபாரத்தை இழந்த கடைக்காரர்களைக் கடன் கொடுத்தவர்கள் தொல்லைப் படுத்துவார்கள். இவ்வளவு கருணையற்ற செய்கையை பர்மிய சர்க்கார் மேற்கொண்டதற்குக் காரணம் பெரும்பாலான கடைக்காரர்கள் இந்தியர்கள் அல்லது சீனர்கள் என்பதுதான்.

வெளி நாடுகளுக்குச் சென்று அந்நாடுகளைத் தாயகமாக ஏற்றுக்கொண்டுள்ள இந்தியர்கள் சமீப காலத்தில் சொல்லொணுக் கஷ்டங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள். இப்படி அவர்களுக்கு அநீதி இழைக்க அந்த நாடுகள் துணிந்ததற்குக் காரணம் இந்தியாவின் செல்வாக்கு மிகத் தாழ்ந்திருப்பதும் வெளிநாடுகளில் இருக்கும் நம்மவர்களைப் பற்றி நம்முடைய ஆட்சியாளர்களுக்கு அக்கறை இல்லாததுமே. சென்ற பதினேழு ஆண்டுகளில் காங்கிரஸ் ஆட்சி எதிலேனும் வெற்றி கண்டிருக்கிறது எனில் அது இந்தியாவின் செல்வாக்கைக் குறைப்பதிலேதான்!

## நேர்மைக்குத் தண்டனை

ஒலிபரப்பு இலாகாவைப் பற்றி மக்கள் சபையில் எழுந்த சர்ச்சையின் போது ஸ்ரீ எம். ஆர். மஸானி குறிப்பிட்ட ஒரு சம்பவம் காங்கிரஸ் ஆட்சியின் அதிகார மமதையை வெகு நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

ஒரிஸ்ஸாவில் முதன் மந்திரியாக இருந்த பட்நாயக் அவர்கள் உணவுப் பிரச்னை சம்பந்தமாக ஒரிஸ்ஸா ரேடியோ நிலையத்தில் பேச விரும்பினாராம். இதற்காக அவர் தயாரித்திருந்த உரையில் அரசியல் கட்சிகள் தாக்கப்பட்டிருந்தன







வாம். ஆகவே ரேடியோ நிலையத்தின் நிகழ்ச்சி நிர்வாக அதிகாரி இந்தப் பேச்சை நிராகரித்து விட்டார். ஆனால் பட்நாயக் தமது பதவியைக் கொண்டு அதிகாரியை மிரட்டி ரேடியோவில் தமது பிரசங்கத்தை நிகழ்த்தி விட்டார். இதனைப் பி. சோ. கட்சி அங்கத்தினர் ஒருவர் ஆட்சேபித்துத் தில்லி ஒலி பரப்பு இலாகாவுக்கு எழுதினாராம். அதன் விளைவு என்னவெனில் ரேடியோ நிலைய அதிகாரி வேலையை இழந்தார்!

காங்கிரஸ் மந்திரிகள் எப்படி வரம்பு மீறி நடந்து, நேர்மையோடு நடக்கும் உத்தியோகஸ்தர்களைக் கஷ்டப்படுத்துகிறார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

இத்தகைய ஒரு சம்பவம் பிரிட்டனிலோ வேறு எந்த ஜனநாயக நாட்டிலோ நடைபெற்றிருந்தால் தேசமே அமளி துமளிப்பட்டிருக்கும்.

**வியாபாரிகளின் எதிர்ப்பு**

அரிசி வியாபாரத் துறையில் இருப்பவர்கள், சர்க்கார் அமுலாக்கவிருக்கும் கண்ட்ரோல் முறை பொதுமக்களுக்குப் பெரும் கஷ்டத்தை விளைவிப்பதில் வந்து முடியும் என்று கடுமையாக எச்சரிக்கை செய்கிறார்கள். பொது மக்களும் கட்டுப்பாட்டின் லட்சணத்தை உணர்ந்திருப்பதால் இப்போது மார்க்கெட்டில் படி இரண்டு ரூபாய்க்குக் கிடைக்கும் அரிசியும் அந்தர்தானமாகி, கறுப்பு மார்க்கெட்டில் மேலும் விலை கூடுதலாகி விடுமே என்று அஞ்சுகின்றனர். வியாபாரிகளும், பொது மக்களும் ''வேண்டாம்; வேண்டாம்'' என்று எச்சரிக்கை செய்தும், தங்கள் யோசனையைச் சர்க்கார் கைவிடாமல் இருப்பது பெருத்த அறிவீனமாகும்.





1. காங்கேய நல்லூர் முருகப் பெருமான் இலட்ச தீபத் திருவிழாவில் வைர முடி சேவையும், திருவாரியாரின் திருப்புகழ் பஜனையும். 2. சென்னை பார்த்தசாரதி சுவாமி சபாவில் தீக்ஷிதர் அவர்களின் ராமாயணப் பிரவசனத்தைக் காரப்பங்காடு சுவாமிகள் ஆரம்பித்து வைத்தார். 3. மேற்கு ஜெர்மனியின் கடற்படையைச் சேர்ந்த இரண்டு






சண்டைப் பயிற்சிக் கப்பல்கள் மார்ச் 19ந் தேதி சென்னை துறைமுகத்துக்கு வந்தன. மக்கள் பார்வையிட்ட அக் கப்பல்களில் ஒன்று இது. 4. சமஸ்கிருதப் பேராசிரியர் டாக்டர் ராகவன் அமெரிக்கா சென்றதையொட்டி அவருக்குச் சென்னை நாட்டிய சங்கம் அளித்த வழியனுப்பு விழா. 5. சென்னை தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தின் ஆதரவில் வெளிவந்துள்ள நான்கு புத்தகங்களைச் சென்னை முதன் மந்திரி திரு எம். பக்தவத்ஸலம் வெளியிட்டார்.





# போகிற போக்கில்..



பாங்குகளைத் தேசிய மயமாக்கிய பர்மா சர்க்கார் சில்லறைக் கடைகளையும் இப்போது திடீரெனத் தாங்களே எடுத்துக்கொண்டுவிட்டனர். அழுகும் உணவுப் பண்டங்கள், பீங்கான் சாமான்கள் ஆகியவற்றை விற்கும் கடைகளைக் கூட அவர்கள் விட்டுவைக்கவில்லையாம். இந்தியாவைச் சுற்றி கம்யூனிஸம் எவ்வளவு வேகமாகப் பரவிவருகிறது, நமது பஞ்சசீலம் எந்த அளவுக்கு வெற்றி பெற்றிருக்கிறது(?) என்பதை இந்தச் செய்திகளெல்லாம் தெளிவுபடுத்துகின்றன.

ஃ ஃ ஃ

சீனப் படையெடுப்பின்போது பிரகடனப்படுத்தப்பட்ட நெருக்கடி நிலைமை ஆளும் கட்சியினராலேயே எவ்வாறு மதிக்கப்படுகிறது — அதாவது, மதிக்கப்படவில்லை—என்பதற்கு மற்றோர் உதாரணம் வந்திருக்கிறது. பாஞ்சாலத்தில் முன்பு முப்பது பேர் மந்திரிகளாக இருந்தார்கள். அவசர காலம் பிரகடனப்படுத்தப்பட்டதும் இந்த முப்பது பேர்களை ஒன்பது பேர்களாகக் குறைத்தார்கள். இப்போது ஒன்பது பேர்களை எப்படி அதிகப்படுத்துவது என்று யோசிப்பதாகத் திரு கெய்ரோன் சொல்லுகிறார். அதிகப்படுத்த வேண்டிய அவசியம் என்ன என்பதை அவர் விளக்கக்கூடவில்லை. 'எந்தச் சட்டமும் காங்கிரஸ் ஆட்சியாளரைக் கட்டுப்படுத்தாது' என்று ஒரு திருத்த மசோதா மக்கள் சபையில் பிரேரணையாகப் போகிறது என்று சிட்டுக்குருவிக்குத் தகவல் வந்திருக்கிறது.

ஃ ஃ ஃ

துங்கபத்ரா கால்வாய்ப் பகுதியில் ஹொஸ்லே ஹன்னவாடி என்றொரு கிராமம். அந்தக் கிராமத்திலுள்ள தேவதையின் சிலை ஒன்று அந்தக் கிராம மக்களிடம் பேசியதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. இந்தச் சிலை என்ன பேசியது என்பதுதான் வேடிக்கை. இந்தக் கிராமப் பகுதி வெள்ள ஆபத்துக்குள்ளாகி, கிராம மக்களை அந்தப் பகுதியிலிருந்து காலி செய்ய அரசாங்கம் உத்தரவிட்ட நிலையில்தான் சிலை வாய் திறந்து கிராம மக்களிடம் 'அரசாங்க உத்தரவுப்படி வெளியேறுங்கள்' என்று பேசியதாகச் செய்தி தெரிவிக்கிறது. அப்படியானால் சிலைகள்கூட அரசாங்கத்தை எதிர்க்கின்றன போலும்! அரசாங்கத்தை எதிர்க்கப் பயப்படும் மக்களை நோக்கி, 'என்ன சிலை மாதிரி வாயடைத்துப் போய் விட்டீர்கள்?' என்று இனி கேட்க முடியாது.

ஃ ஃ ஃ

தங்கக் கட்டுப்பாடு உத்தரவுக்குப் பிறகு தங்கம் வருவது குறைந்து அதற்குப் பதிலாக வைரம் கடத்தப்படுவதாக நிதி இலாகாவின் துணை மந்திரி திரு பகத் பாராளுமன்றத்தில் கூறியிருக்கிறார். இந்தச் செய்திக்குப் பிறகு வைரத்துக்கும் தலைவலி பிடித்திருக்கிறது என்று கணிக்கப்படுகிறது. தங்கக் கட்டுப்பாடு உத்தரவு வந்தது போல் வைரக் கட்டுப்பாடு உத்தரவும் சீக்கிரத்தில் வரலாமென்று எதிர்பார்ப்போமா? இப்படி வரும்பட்சத்தில் கடத்தல்காரர்கள் என்ன செய்வார்களோ தெரியவில்லை. வேறு ஏதாவது ஒரு பொருளுக்குத்தான் தாவுவார்கள். அப்படி அவர்கள் தாவும்போது அரசாங்கமும் அந்தப் பொருள்கள் மீதுதான் தாவும். இப்படி அரசாங்கமானது கடத்தல் பொருள்கள் மீது தாவிக்கொண்டே போவதை விடக் கடத்தல் பேர்வழிகள் மீது தாவினால் என்ன?

ஃ ஃ ஃ

ஆந்திரத்திலுள்ள கம்யூனிஸ்டுகள் இரு பிரிவாகப் பிரிந்து ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொள்கிறார்களாம். இதில் ஒரு கோஷ்டி மாஸ்கோவை ஆதரிப்பதாகவும், இன்னொரு கோஷ்டி பீகிங்கை ஆதரிப்பதாகவும் செய்திகள் வருகின்றன. இரண்டு கோஷ்டிகளிடையே ராஜ்யசபைத் தேர்தலையொட்டிப் பலப் பரீட்சை நடப்பதாகக்கூடச் சொல்லுகிறார்கள். இந்த இரண்டு கோஷ்டிகளில் எந்தக் கோஷ்டியைக் காங்கிரஸார் ஆதரிக்கிறார்கள் என்று தெரியவில்லை. இந்தக் கேள்வியும் ராஜ்ய சபைத் தேர்தல் முடிவு தெரியும்போது வெளியாகிவிடுமாம். சென்னையில் பாகுபாடு பாராது கம்யூனிஸ்டுகளோடு கைகோத்து உலவும் காங்கிரஸ்காரர்களைப் பார்த்து ஆந்திரக் காங்கிரஸ்காரர்களும் அப்படிச் செய்யலாமா என்று யோசிக்கிறார்கள். இப்போது இரு வேறு கட்சிகளான காங்கிரஸும், கம்யூனிஸ்டும் ஐக்கியமாவது பற்றி ஆளும் கட்சி நினைத்து வரும்போது, கம்யூனிஸ்ட் கட்சியே இரண்டாகி யாருடன் இணைவது என்ற பிரச்னையைக் காங்கிரஸாருக்கு ஏற்படுத்திவிட்டதே!

ஃ ஃ ஃ

கூர்ஜர மாநிலத்தில் உதவி மந்திரி ஒருவரால் ஒரு பள்ளிக்கூடம் நடத்தப்படுகிறதாம். இந்த மந்திரி, பள்ளி ஆசிரியர்களிடமே பள்ளிக்கூடத்துக்கு நன்கொடை தரும்படி கட்டாயப்படுத்துகிறாரென்று அந்த மாநில சட்ட சபையில் புகார் கூறப்பட்டிருக்கிறது. ஆசிரியர்களே நன்கொடை தருவதென்றால் அவர்கள் மாணவர்களைச் சும்மா விடுவார்களா என்பதை விளக்க வேண்டியதில்லை. ஆகவே பள்ளிக்கூடத்தில் பாடம் நடக்குமா அல்லது வசூல் நடக்குமா என்பதை நாம் சொல்லவே வேண்டாம்.

இந்தப் புகாரை எழுப்பிய எதிர்க் கட்சி அங்கத்தினர் ''மந்திரி இப்படிச் செய்யலாமா?'' என்று கோபாவேசமாகப் பேசினாரென்று ஒரு செய்தி வர்ணிக்கிறது. நல்ல காலம், கட்சிக்கு நன்கொடை கேட்காது பள்ளிக்குத் தானே கேட்டார் என்று சென்னைவாசி ஆறுதல் கூறுகிறார். — **சிட்டுக்குருவி**

# பட்டினத்துப் பேச்சு



✿ ''ரயில்வே நிர்வாகம், இந்தக் கால அட்டவணையில் குறிப்பிட்டிருக்கும், புறப்பாடு வருகை நேரங்களைப் பற்றி உத்தரவாதம் அளிப்பதில்லை......''

—ரயில்வே காலஅட்டவணை

ஆனால், 'வருடத்துக்குக் குறைந்தது இருபது முறையாவது ரயில் எஞ்சின்கள் தண்டவாளத்தை விட்டுக் கீழிறங்கிப் புல் மேயப் போகுமென்றும், 'லெவல் கிராஸிங் கேட்' பக்கம் வரும் பஸ், மோட்டார் வண்டிகளுடன் விளையாடும் என்றும், ஸ்டேஷன்களில் நிற்கும் மற்ற வண்டிகளை முட்டித் தள்ளி அவற்றின்மீது ஏறுமென்றும் ஒட்டகங்களைத் தாக்கும் என்றும் உத்தரவாதம் அளிக்கிறோம்' என்று தைரியமாய்ப் போடலாமே!

✿ இந்தியாவிலேயே மிக நீண்ட பெயருள்ள சட்டசபையான, கோவா — டாமன் —டையு பிரதேச சபையில், டாக்டர் லெக்யு ரெர்ஸ் (எதிர்க் கட்சித் தலைவர்): அறுபது பள்ளிக்கூடங்களில் மொத்தம் 2441 மாணவர்கள்தானா இருக்கிறார்கள்?

டோனி பர்னாண்டெஸ் (நிதிமந்திரி): இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது! பையன்களே இல்லாத சில பள்ளிக்கூடங்களும் இருக்கின்றனவே!

ஆனால் மற்ற சில ராஜ்யங்கள் இவ்வளவு மோசமில்லை. அங்கே உபாத்தியாயரில்லாத பள்ளிக்கூடங்கள், வைத்தியரில்லாத வைத்தியசாலைகள்..... முதலியனதான் இருக்கும்.

✿ மேற்கு கோதாவரி ஜில்லா கலெக்டர், ஜில்லா நீர்ப்பாசன மகாநாட்டுக்கு வந்திருந்த ஒரு சட்டசபை அங்கத்தினர் பேச எழுந்திருந்த போது, ''உட்காருங்கள்! வளவளவென்று பேசுவதற்கு இது சட்டசபையல்ல'' என்று பொருள்பட உண்மையைச் சொல்லியபோது அங்கத்தினர்களுக்கு ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. அதன் விளைவாகக் கலெக்டர் இப்போது மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும்படியாகி விட்டது. ஆனால் இப்படி நடந்தாலோ ?—



கணவன் (எம். எல். ஏ.): எனக்கு வருகிற கோபத்துக்கு, பேசாமல் வீட்டை விட்டு வெளியே நடந்து போய் விடுவேன்.

மனைவி: வெளியேற்றம் செய்ய இது என்ன சட்டசபை என்று நினைத்தீர்கள் ?

✿ ''...அரசாங்க உத்தியோகங்களுக்கான பரீட்சை எழுதும் மாணவர்களுள் பலருக்கு ஆங்கில மொழி அறிவு சுத்த மோசம். ஒருமைப் பெயர்ச் சொல்லுக்குப் பன்மை வினைச் சொல்லையும், செய்வினைக்குச் செயப்பாட்டு வினையையும் மிகவும் தாராளமாக உபயோகிக்கிறார்கள். இலக்கண விதிகளை அவர்கள் லட்சியமே செய்யவில்லை....''

—சென்னை பப்ளிக் சர்வீஸ் கமிஷன்

இந்த அறிக்கையைப் படிக்கும் மாணவர்களின் இரத்தம் கொதித்து எழுமென்பது நிச்சயம். அவர்களுள் அரசாங்க உத்தியோகமே வேண்டியதில்லை என்று உறுதி பூணக்கூடிய மாணவர் ஒருவர் இருந்தால் அவர் நேரே பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தலைவரிடம் போய்ச் சொல்வார் :

''ஏ, எழுவாயே, பயனிலையே! உனக்கு விஷயம் முக்கியமா? இலக்கணம் முக்கியமா? ஏ, செயப்பாட்டு குன்றிய வினையே! ஆங்கில மொழி இலக்கணம் தெரியா விட்டால், அரசாங்கக் காரியாலய பைல்களைக் கட்டிப் போட்டு வைக்கத் தெரியாதென்றோ, 'ஸம்திங்' வாங்கத் தெரியாமல் போய்விடுமென்றோ நினைத்துக் கொண்டிருக்கிறாயா ? ஏ, இடக்கரடக்கலே!....''

✿ சாகித்திய அகதமி, லலிதகலா அகதமி, சங்கீத நாடக அகதமி இவை மூன்றுக்குள்ளும் பலத்த போட்டா போட்டி ஏற்பட்டிருக்கிறது. அவை பிரசுரித்திருக்கும் புத்தகங்களுள் எது மிக மிகக் குறைவாக விற்கிறதென்பதைப் பற்றித்தான். ஸங்கீத நாடக அகதமிதான் முதல் பரிசைத் தட்டிக்கொண்டு போய் விடும் போலிருக்கிறது. மற்ற இரண்டின் புத்தகங்கள் கேவலம் நூற்றுக்கு அறுபது, எழுபது சதமே விற்கப்படாமல் மீந்து போய் விட்டிருக்க, சங்கீத நாடக அகதமியின் புத்தகங்கள் நூற்றுக்கு 95 சதவிகிதம் வரை மிகவும் பத்திரமாயிருக்கின்றன!



ஆனால் ருசிகரமான புத்தகங்களை வெளியிட்டதற்கு அகதமி பரிசளிப்பதாயிருந்தால், அது லலிதகலா அகதமிக்கே போய்ச் சேரும். ஏனென்றால், 20, 25 சதவிகித புத்தகங்களைக் கறையான்கள் ருசி பார்த்து விட்டன!

ஆனால் புத்தகங்கள் மிகுந்து போய் விட்டனவே என்று கவலைப்படற்க. அவற்றை எந்தப் பழைய பேப்பர்க்காரனும் வாங்கிக் கொள்வானே ?

✿ 1957ம் ஆண்டில், மாதம் 3105 ரூபாய் வீதம் சம்பாதித்த சென்னை அரசாங்க பஸ் 1963ம் ஆண்டில் 4526 ரூபாய் சம்பாதித்துக் கொடுத்ததென்றால் ஸ்ரீ பொதுஜனப் பிரயாணியைப் பற்றிய கணக்கைச் சொல்லவும்.

**விடை :** வருமானம் சுமார் நாற்பது சதவிகிதம் ஏறியிருப்பதால் ஒரு பஸ்ஸில் அதே விகிதம் அதிகமான பிரயாணிகளும் அடைக்கப்பட்டு, திணிக்கப்பட்டிருப்பார்கள்.—**காசி**



அகிலன்
எழுதும்
கயல் விழி
சரித்திரக் கதை
கல்கி
ஏப்ரல் 12ந்தேதி
புத்தாண்டு மலரில்
ஆரம்பமாகிறது




✿ ஒளியைவிட வேகமாகச் செல்லும் ஸூபர்ஸானிக் விமானங்கள் இப்போதே வானில் பறந்து கொண்டிருக்கின்றன. எனினும் அவை சிறிய போர் விமானங்களே. பெரிய அளவில் ஸூபர்ஸானிக் பிரயாணி விமானங்கள் பிரபலமடையும் நாள் வெகுதூரத்திலில்லை. ஏர் இந்தியா இண்டர்நேஷனல் இப்போதே இத்தகைய விமானங்களுக்கான அட்வான்ஸ் தொகையை அமெரிக்க அரசாங்கத்திடம் கொடுத்து வைத்திருக்கிறது. பிரிட்டன்—பிரான்ஸ் கூட்டுத் தயாரிப்பான கன்கார்டேயைத் தவிர அமெரிக்காவிலேயே மூன்று விமானக் கம்பெனிகள் ஸூபர்ஸானிக் விமானத் தயாரிப்புக்கான திட்டங்களைத் தயாரித்து அரசாங்கப் பரிசீலனைக்கு அளித்துள்ளன. இந்த ரகசியத் தஸ்தாவேஜுகளின் எடையே மூன்று டன்! ஒரு ஸூபர்ஸானிக் விமானம் தயாரிக்கச் சுமார் முப்பது மிலியன் டாலர் (15 கோடி ரூபாய்) செலவாகலாம். 210 அடி நீளமுள்ள இந்த விமானம் 210 பிரயாணிகளை ஏற்றிச் செல்லும். ஒளியைவிட மூன்று மடங்கு வேகமாக (மணிக்கு இரண்டாயிரம் மைல்) பிரயாணம் செய்யலாம். நியூயார்க்கிலிருந்து பாரிஸ், பம்பாயிலிருந்து லண்டன் என்று இப்படி நீண்ட தூரப் பயணங்களை வழியில் எங்கும் இறங்கி ஏறாமல் ஒரே மூச்சில் முடித்து விடலாம். இத்தகைய நீண்ட தூரப் பயணங்களே ஸூபர்ஸானிக்குக்கு ஏற்றது. என்றாலும் இப்படி நீண்ட தூரப் பிரயாணிகள் அதிகம் பேர்கள் இருக்கிறார்களா, ஸூபர்ஸானிக் பிரயாணிகள் விமானம் லாபகரமாக இயங்க முடியுமா என்றெல்லாம் இப்போது முதலே விமானக் கம்பெனி நிர்வாகிகள் மண்டையை உடைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டனர்.

✿ அலிகாரிலுள்ள கண் ஆஸ்பத்திரியில் செயற்கை விழிகளை (காண்டாக்ட் லென்ஸ்) பொருத்தும் துறையில் மிகுந்த முன்னேற்றம் கண்டிருக்கிறார் டாக்டர் தேவேந்திர குமார். உடையாத பிளாஸ்டிக்கினாலான இந்த விழிகளைப் பயன்படுத்திக் கண் பார்வை இழந்தவர்களில் பலர் மீண்டும் பார்வையைப் பெறலாம். மூக்குக் கண்ணாடி அணிவதை விரும்பாதவர்களும் இந்தச் செயற்கை விழிகளை உபயோகிக்கலாம். ஒருவர் செயற்கைவிழியை உபயோகிப்பது மற்றவர்களுக்குத் தெரியாத வகையில் அது மிகவும் 'இயற்கை'யாகவே அமைந்து விடுகிறது. கண் சிமிட்டுவது, கண்ணீர் விட்டு அழுவது, தூங்குவது எல்லாமே சிரமமின்றிச் செய்யலாம். கிரிக்கெட் பிரியர்களுக்கு மட்டை பிடித்து ஆடும்போது மூக்குக் கண்ணாடி உடைந்து விடுமோ என்ற கவலையே இருக்காது!

✿ இங்கிலாந்தில் பர்மிங்ஹாமிலுள்ள ஏரியல் மோட்டார் ஸ்தாபனம் புதிய மோட்டார் சைக்கிள் உற்பத்தி செய்திருக்கிறது. ஒரு காலன் பெட்ரோலுக்கு இருநூற்றைம்பது மைல் செல்லும். அதிகபட்ச வேகம் மணிக்கு நாற்பது மைல். சமீபத்தில் இந்தக் கம்பெனி நடத்திய பரிசோதனையில் இந்த மோட்டார் சைக்கிள் ஒரு சிறிய தொந்தரவு கூடக் கொடுக்காமல் ஆயிரம் மைல் தூரம் சென்றதாம். இந்தப் பரிசோதனையின்போது, 180 பவுண்டு எடையுள்ள இருவர் இதனை மாறி மாறி ஓட்டிச் சென்றனர்.

✿ பாம்பின் கால் பாம்பு அறியும்!—மகாபலிபுரத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்த 'ஏ'யிடம் குறைந்த விலைக்கு 'பி' ஒரு சைக்கிளை விற்க முற்படுவதைப் பார்த்ததும் 'ஏ' அது திருட்டுச் சொத்தாக இருக்குமோ எனச் சந்தேகப்பட்டு 'பி'யைப் போலீஸில் ஒப்படைத்தான். பின்னால் போலீசார் செய்த விசாரணையில் 'ஏ' ஒரு நகைத் திருடன் என்பது வெளியாயிற்று. 'ஏ'யும், 'பி'யுடன் கம்பி எண்ணப் போறான் — இனம் இனத்தைச் சேரும் !

✿ நீரிலே செல்கின்ற ஆனால் நீரிலே செல்லாத, நிலத்திலே விரைகின்ற ஆனால் நிலத்திலே விரையாத, வானிலே பறக்கின்ற ஆனால் வானிலே பறக்காத ஒரு வகை புதுமையான வாகனத்தை மேலை நாடுகளில் உருவாக்கியிருக்கிறார்கள். இந்த வாகனத்தின் அடிவாரத்துக்கும் பூமி மட்டத்துக்கும் (அல்லது நீரின் மேல் மட்டத்துக்கும்) இடையில் காற்றுப் பரப்பு இருந்து கொண்டேயிருக்கும். பூமியில் போய்த் தாக்குமாறு வேகமாகக் காற்றை வெளிப்படுத்தி அதன் மூலம் தன்னை இலேசாக உயர்த்திக் கொண்டு அந்தக் காற்று மெத்தை மேல் மிதந்தவாறே இந்த வாகனம் முன்னேறி விரைந்து போகும். விமானத்தில் உள்ளது போல் இதிலும் முன்னுக்கு நகர வசதியாகச் சுழலும் விசிறிகள் உண்டு. எதிர்காலத்தில் இந்த வாகனத்துக்கு நிரம்பக் கிராக்கி இருக்கும் என்று நம்புகிறார்கள். பிரிட்டனில் முதலில் தயாரான இந்த வாகனத்தை இப்போது அமெரிக்க அரசாங்கத்தின் கப்பல் தொழில் இலாகாவினரும் பல அபிவிருத்திகளுடன் உற்பத்தி செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.



# இந்திய புஷ்காஸ்

சின்னஞ்சிறுவர்கள் பழைய துணிகளையும் ஸ்டாக்கிங்ஸ் துணிகளையும் சுருட்டிப் பந்தாக்கி விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குக் காலில் அணியும் பூட்ஸ்கள் கிடையாது. இந்தச் சிறுவர்களின் ஆர்வத்தைக் கண்டு, ஹங்கேரி கால்பந்தாட்டப் பயிற்சியாளர் நந்தர் ஸைலக்ஸ், அவர்களைத் தம் விளையாட்டு மைதானத்துக்கு அழைத்துச் சென்று பயிற்சியளித்தார். அந்தத் தேர்ந்த சிறுவர்களில் முதன்மையானவர் அகில உலகப் புகழ் பெற்ற கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸ். அவர் முதல் பந்தயத்தில் கலந்து கொண்டதே அதிசயமானது. நகரொட்டில் நடைபெற்ற பெரிய கால்பந்தாட்டப் போட்டிக்கு நந்தர் கால்பந்தாட்டக்காரர்களையும், பதினேழு வயதான புஷ்காஸையும் அழைத்துச் சென்றார். ஸ்டேடியம் வாசலில் புஷ்காஸை வெளியே நிறுத்தி விட்டார்கள். அந்தப் பெரிய கால்பந்தாட்டப் பந்தயத்தில் இவ்வளவு சிறியவன் ஆட முடியாது என்று கருதியே அவனை வெளியே நிறுத்தி விட்டார்களாம். அந்தக் கோஷ்டியின் மானேஜர் 'புஷ்காஸும் இந்தப் பந்தயத்தில் ஆடுகிறான்!' என்று கூறி உள்ளே அழைத்து வந்தாராம். தாம் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதற்காக அந்த மானேஜர் அன்றையப் பந்தயத்தில் வழக்கமான ஆட்டக்காரர் ஒருவரை நிறுத்தி விட்டுப் புஷ்காஸை ஆட வைத்தாராம். அன்றைய ஆட்டத்தில் புஷ்காஸ் ஆடிய ஆட்டத்தைக் கண்டு கூடியிருந்த அனைவரும் பிரமிப்பில் ஆழ்ந்து விட்டார்களாம்.... உலகப் புகழ் பெற்ற கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸ் ஹங்கேரியின் வெற்றிக்குப் பல தடவை உறுதுணையாக இருந்திருக்கிறார்....

சென்னை நகர ஸ்டேடியத்தில் சந்தோஷ் கோப்பைக்காக நடந்த தேசிய விளையாட்டுப் போட்டியின் இறுதி ஆட்டத்தில் கட்டை குட்டையான இளைஞர் ஒருவர் 'இதோ ஓர் இந்திய புஷ்காஸ்' என்று சொல்லுமளவுக்குக் கால்பந்தாட்ட ரசிகர்களின் உள்ளத்தைக் கவர்ந்தார். அவர் ஹமீத் என்னும் இளைஞர்தான்! இறுதியாட்டத்தில் மகாராஷ்டிர கோஷ்டிக்காக ஆடிய அவர் பந்தைக் 'கோலு'க்குக் கொண்டு போகும் அழகையும் எதிரி ஆந்திர கோஷ்டியினரைத் திணற வைத்துப் பந்தைத் தாக்கும் திறமையையும் கண்டு அதிசயிக்காதவர் இல்லை. ஹமீத் பிரபல கால்பந்தாட்டப் பயிற்சியாளர் ரஹீமின் சகோதரர். ஆட்டம் அவரிடம் பேசுகிறது! ஹமீத் பந்தை அழகாக எடுத்துக் கொண்டு போய் டிசௌசாவிடம் கொடுக்க, அவர் அதை வெற்றிகரமாக 'கோலு'க்குள் அடித்து வெற்றிப்பாதையைச் சமைத்து விட்டார். பல தடவை 'ஆப்சைட்'டில் நின்று 'ரிபரி'யின் அபாய அறிவிப்புக்கு டிசௌசா இலக்கானாலும் கடைசியில் வெற்றிக் கோலை அடித்து அதை மறக்கடிக்கச் செய்து விட்டார்!

எதிரி கோஷ்டியின் மீது 'கோல்' மட்டும் போட்டால் போதுமா? தம் கோஷ்டி மீது கோல் விழாமல் பாதுகாத்தால்தானே வெற்றியை நிலைநிறுத்த முடியும்? கோல்கீப்பர் நாராயணன் 'உலகளந்த பெருமாள்' என்று சொல்லுமளவுக்கு உயரமானவர். அதோடுமட்டுமல்ல; கோலுக்கு அடிக்கும் அத்தனை பந்துகளையும் அவர் லாகவமாகத் தடுத்துப் பிடித்தாட் கொண்டது மகாராஷ்டிர கோஷ்டியை வெற்றிப் பாதையிலிருந்து சறுக்காமலிருக்க வழிகோலியது. ஆந்திர கோஷ்டியினர் பல தடவை 'கோலு'க்குள் லாகவமாக அடித்ததை யெல்லாம் அநாயாசமாகக் கோல்கீப்பர் நாராயணன் பிடித்துத்

வெற்றிபெற்ற மகாராஷ்டிர கோஷ்டியினர்



தடுத்தாட் கொண்டால் ஆந்திர கோஷ்டியினர் சலித்துப் போகாமல் என்ன செய்வார்கள்? அப்படி கோல்கீப்பர் நாராயணனையும் ஏமாற்றி ஆந்திர கோஷ்டியினர் ஒரு பந்தை அடித்தால் அதைக் காப்டன் சந்திரசேகரன் வந்து தடுத்து விட்டார்.

1941ம் வருஷத்திலிருந்து சந்தோஷ் கோப்பை, சந்தோஷ் ஊரைச் சேர்ந்த இந்திய கால்பந்தாட்டப் பெடரேஷனின் தலைவர் மன்மதநாத் ராய் சௌத்ரியின் நினைவாகத் தேசிய கால்பந்தாட்டப் போட்டியின் இறுதியில் வெற்றி பெறுபவர்களுக்கு வழங்கப்பட்டு வருகிறது. மகாராஷ்டிரத்தின் முன்னணி ஆட்டக்காரர்களும் பின்னணி ஆட்டக்காரர்களும் இணைந்து ஆடிய ஆட்டம் வெற்றிக் கோப்பையை அவர்களுக்குத் தந்துவிட்டது.

''ஆமாம்! மகாராஷ்டிர வெற்றி இருக்கட்டும். நம் உள்ளூர் ஆட்டக்காரர்கள் என்ன ஆனார்கள்?'' என்று கேட்கிறீர்களா? குவார்ட்டர் பைனலில் சென்ற வருடச் சந்தோஷ் கோப்பை வெற்றி வீரர்களான வங்காள கோஷ்டியினரைச் சென்னைக் கால்பந்தாட்டக் கோஷ்டியினர் பிரமாதமாக உயிரை விட்டு ஆடி வெற்றி கொண்ட காரியம் ஒன்று போதும்! ஆனால் மறுநாளே செமி பைனலில் மகாராஷ்டிர கோஷ்டியினரிடம் படுதோல்வியடைந்தது துரதிர்ஷ்டம்தான்.

விக்கிரமாதித்தன் 'காடாறு மாதம் நாடாறு மாதம்' ஆட்சி நடத்தியதாகக் கேள்விப்படுகிறோம். இரு செமி பைனல்களில் தோல்வியுற்ற சென்னை ஆட்டக் கோஷ்டியினரும், ரயில்வே கோஷ்டியினரும் ஆடிய 'லூஸிங் செமி பைனல்' ஆட்டத்தில் ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்து, ஆளுக்கு ஆறு மாதம் கோப்பையை வைத்துக் கொள்ளும் அதிசயத்தைக் கண்டோம். சென்னை ஆட்டக்காரர்களில் முன்னணி ஆட்டக்காரர் தாருபதி அனைவரது உள்ளத்தையும் கவர்ந்து விட்டார்.

காஷ்மீரைத் தவிர இந்திய நாட்டிலுள்ள பல ராஜ்யங்களும் கலந்து கொண்ட இந்தத் தேசிய கால்பந்தாட்டப் போட்டியில் கைதேர்ந்த பல ஆட்டக்காரர்களின் திறமையைக் காண முடிந்தது.

—குண்டுமணி





# அமைச்சர் மதுரகவி

ஒற்றனைக் கண்டு பேசி அவனிடமிருந்து ரகசிய ஓலையை வாங்கி வருவதாகக் கூறிச் செல்லும் சோழ ராஜகுமாரன் ஆதித்தன், நம்மாழ்வார் பாசுரங்கள் அடங்கிய ஓலைச் சுவடியுடன் திரும்புகிறான். மீண்டும் ஒருமுறை மீன இலச்சினையைத் திருடி வர அந்தப்புரத்துக்குள் நுழையும் அதே ஆதித்தன் கயல் விழியின் (வசந்தா) கண் வீச்சிலே கட்டுண்டு தமிழ் இலக்கணம் பற்றிய ஓலைச் சுவடிகளுடன் திரும்புகிறான். இந்த லட்சணத்தில் ஆதித்தனை மீண்டும் சோழ அரியாசனத்தில் அமரச் செய்ய அவன் மாமா ஆளியன் (பகவதி) போடும் திட்டங்கள் எங்ஙனம் நிறைவேறும்?

அரசியலைப் பொறுத்த மட்டில் சோழ அரச குமாரன் இப்படிப்பட்ட அசடனாயிருப்பதாலேயே பாண்டி நாட்டு முதன் மந்திரி மதுரகவிக்கு (ஷண்முகம்) அவனைத் தம் வசப்படுத்தும் வேலை மிகவும் எளிதாகி விடுகிறது. பாண்டியரைப் பழி வாங்கவந்த ஆதித்தனையே அவர் பாண்டியப் படைத் தளபதியாக்கித் தெற்கே அனுப்புகிறார். ஆதித்தனும் தன் எதிரியின் சார்பாகப் போரிட்டு வெற்றிவாகை சூடித் திரும்புகிறான்.

மல்யுத்தம் செய்யும் இருவர் ஒத்த பலமுடையவர்களாயும் அந்தக் கலையில் சமமான வல்லுனர்களாயும் இருக்கும் போதுதான் பார்வையாளருக்கு ரசிக்கும். ஒருவன் சோனியாகவும் மற்றொருவன் பலசாலியாகவும் இருந்தால் அவர்கள் நடத்தும் மல்யுத்தம் 'சப்' பென்றுதான் இருக்கும். அரசியல் சாணக்கியமும் அப்படித்தான். நாடகத்தில் அமைச்சர் மதுரகவியின் திறமை முழுமையாக வெளிப்பட வழியில்லாமலே போய்விடுவது இதே காரணத்தினால் தான். சக்தி வாய்ந்த எதிரியைச் சமாளித்து வெற்றி கண்ட பெருமை அவருக்குச் சேரவில்லை. மொத்தமாக நாடகத்தைப் பார்க்கும்போது இந்தக் குறை பெரிதாகப் பட்டாலும் முடிவிலே, இந்த இந்தக் கதாபாத்திரத்தின் குண இயல்பு இப்படி. இப்படித்தான் இருக்க வேண்டும்: ரொம்பச் சரியாகவே அமைந்திருக்கிறது என்ற நிறைவையும் எப்படியோ உண்டாக்கி விடுகிறார் ஆசிரியர் ஸ்ரீ வேணுகோபாலன். ஆதித்தனைச் சூதுவாது விரும்பாத சுத்த வீரனாகவும் தமிழன்பனாகவும் படைத்திருப்பதில் குற்றம் கூறத் தோன்றவில்லை என்றாலும் பகைவனை பாண்டியனுடைய படைக்கு அவன் தலைமை ஏற்றுப் போவதையும், ஒருமுறை அவன் பாண்டியப் பெண்ணைப் பார்த்துப் ''பல்லை இளித்த'' பிறகும் மீண்டும் அவனையே அவன் மாமன் ஆளியன் நம்பி மிகப் பெரிய பொறுப்புக்களை ஒப்படைப்பதையும் காண்போர் மனம் ஏற்க மறுக்கிறது.

இந்த அரசியல் குளறுபடிகளை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் டி. கே. எஸ். சகோதரர்கள் இந்த நாடகத்தின் மூலம் நாடகக் கலையை மட்டுமின்றி அத்துடன் தமிழார்வத்தையும் ஆன்மீகத்தையும் இறை உணர்ச்சியையும் சேர்த்து வளர்த்து வருகிறார்கள் என்று புரிந்துகொண்டு மிக அரிய தொண்டு எனப் பாராட்டலாம்.

'விகடன்' நடத்திய நாடகப் போட்டிக்காக எழுதப்பட்ட நாடகங்கள் பலவற்றை, முன்னுக்கு வரத் துடிக்கும் புதிய நாடகாசிரியர்களை ஊக்குவிக்க வேண்டும் என்கிற உயர் நோக்கத்துடன் டி. கே. எஸ். சகோதரர்கள் அரங்கேற்றி வருகின்றனர். அவற்றில் அமைச்சர் மதுரகவியும் ஒன்று. டி.கே.எஸ். முத்திரையல்லவா? நடிப்பும் காட்சி ஜோடனைகளும் வழக்கம்போல் சிறப்பாக இருக்கின்றன.

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான மதுரகவியின் அறிவாற்றலும் புலமையும் ஆங்காங்கே மின்னலைப் போலப் பளிச்சிடுவதால் பொலிவு பெறுகின்ற இந்நாடகம் புயல் வேகத்தில் பரபரவென்று ஓடவுமில்லை, ஒரேயடியாக ஊர்ந்து சென்று அலுப்புத் தட்டவுமில்லை. இருபுறமும் கரை தட்டி அமைதியாகப் பாயும் ஆறுபோல் கம்பீர நடை போடுகிறது.



அருமையான நடிப்பு, எடுப்பான வசனங்களின் போதெல்லாம் பேசாமலிருந்து விட்டுத் தந்திரக் காட்சிகளுக்கு மட்டும் கை தட்டும் ரசிகத் தன்மையையும், இறுதிக் காட்சிக்கு முன்னதாக நடக்கும் நீண்ட பிரசங்கங்களையும் எந்த நாடகத்திலுமே விரும்புவதற்கில்லை. அமைச்சர் மதுரகவி இதற்கு விதிவிலக்குமில்லை. நாடகம் தொடங்குமுன்னரே பேசவேண்டியதையெல்லாம் பேசி முடிக்கும் வழக்கத்தை யாராவது துணிந்து ஆரம்பித்து வைத்தாலென்ன?

# இன்றைய பிரச்னை

## மலேசியா

**நா**ற்பத்தி நாலு சகோதர சகோதரிகளுக்கிடையில் பிறந்த அப்துல் ரஹ்மான் ஒரு துங்கு (அரச குமாரன்) வுக்கு ஏற்ற வகையில் சுகபோகத்தில் வாழ்ந்து வளர்ந்தார். கெடா சுல்தானின் ஆறாவது மனைவிக்குப் பிறந்த நான்காவது குழந்தையாகிய ரஹ்மான், தனக்கு எத்தனையோ அண்ணன்மார்கள் இருக்கத் தன் தகப்பனாருக்குப் பிறகு தான் பட்டத்துக்கு வருவதென்பது அசாத்தியம்; தனக்குப் பெரிய பொறுப்பு ஏதும் வந்துவிடப் போவதில்லை என்கிற எண்ணத்தினால்தானோ என்னவோ பள்ளிப் படிப்பின்போதும் சரி, பிறகு சட்டப் படிப்புக்காகக் கேம்பிரிட்ஜ் சென்றபோதும் சரி பாடங்களில் அவ்வளவாகக் கவனம் செலுத்தவில்லை. ஆனாலும் விதி, அவரை விடவில்லை. கெடாவுக்கு மட்டுமின்றி மலாயாவுக்கு மட்டுமின்றி, மலாயா, சிங்கப்பூர், ஸாரவாக், வடக்கு போர்னியோ அனைத்தையும் உள்ளடக்கிய மலேசியாவுக்கே அவரைத் தலைவராக்கி விட்டது.

சட்டப் பரீட்சையில் 'கோட்' அடித்துவிட்டு மலேயா திரும்பிய அப்துல் ரஹ்மான் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் ஒரு சாதாரண அரசாங்க உத்தியோகத்தை ஏற்றுக் கிபகத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் பிரயாணம் செய்தார். உலக யுத்தத்தின்போது மலாயாவை ஆக்கிரமித்த ஜப்பான் துங்குவைத் தொடர்ந்து அந்த அரசாங்கப் பதவியில் வைத்திருந்தது.

அப்போது கானகங்களில் ஒளிந்திருந்தபடியே ஜப்பானியருக்கு எதிராகக் கலகம் செய்து தொல்லை கொடுத்து வந்த கம்யூனிஸ்டுகளுக்குப் பிரிட்டிஷார் ரகசியமாக ஆயுதங்களைக் கொடுத்து உதவி வந்தனர். மறுபுறம் மலாயா விடுதலை பெற வேண்டும் என்ற இயக்கமும் தோன்றி வளர்ந்து வந்தது. ஜப்பானியருடன் இருந்தவாறே துங்கு மற்ற மூன்று தரப்பினரிடமும் தொடர்புகொண்டு உதவி வந்தார்.

யுத்தம் முடிந்த பிறகு தமக்கு நல்ல எதிர்காலம் இருப்பதை உணர்ந்த துங்கு தமது நாற்பத்தி இரண்டாவது வயதில் மீண்டும் இங்கிலாந்து சென்று சட்டப் பரீட்சை எழுதி வெற்றி பெற்றுத் திரும்பினார். சிறிது காலம் (யு.எம்.என்.ஓ.) ஐக்கிய மலாயா தேசியக் கட்சியின் தலைவராகத் திகழ்ந்து பின்னர் சீனர்களையும், இந்தியர்களையும், மலாய்வாசிகளையும் ஒன்றுபடுத்தும் நோக்கத்துடன் ஒரு புதிய ஒருமைப்பாட்டுக் கட்சியைத் தோற்றுவித்தார். தமது கட்சி நலனுக்காகத் தமது மோட்டார்கார்கள் நிலபுலன்கள் இவற்றை விற்றுப் பணமாக்கவும் துங்கு தயங்கவில்லை. இந்தத் தியாகங்களினால் நல்ல பலனும் கிட்டியது. 1955ல் நடந்த பொதுத் தேர்தலில் மத்திய சட்டசபைக்கான ஐம்பத்திரண்டு ஸ்தானங்களில் துங்குவின் கட்சி ஐம்பத்தொன்றைக் கைப்பற்றியது. துங்கு பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் நாட்டின் பிரதமரானார்.

இதற்கிடையில் ஜப்பானிய ஆட்சியின் கீழ் எந்தக் கம்யூனிஸ்டுகளுக்குப் போர்த் தளவாடங்கள் கொடுத்துப் பிரிட்டிஷார் உதவினார்களோ அதே கம்யூனிஸ்டுகள் இப்போது பிரிட்டிஷ் ஆட்சிக்கே தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தனர். இவர்களுடன் பிரிட்டிஷ்-மலாயாத் துருப்புக்கள் நடத்திய போராட்டம் ஒரு நல்ல முடிவுக்கு வரும் வரை காத்திருந்து 1957ம் ஆகஸ்டு 31ந்தேதி மலாயாவுக்குச் சுதந்திரம் கோரிப் பெற்றார் துங்கு.

ஆனால் அறுபது வயது நிறைந்த துங்கு சுதந்திர மலாயாவுடன் மட்டும் திருப்தியடைந்து விடவில்லை. கம்யூனிஸ்டுகளுடன் நீண்ட யுத்தம் நடத்தி அவர்களுடைய ஐந்தாம் படை வேலைகள், தந்திரங்கள் இவற்றை நன்கு உணர்ந்திருந்த அவர் கம்யூனிஸ அபாயம் தம் நாட்டையும் சுற்றுப்புறத் தேசங்களையும் சதா சூழ்ந்து கொண்டிருப்பதை உணர்ந்தார்.

தென் கிழக்கு ஆசியாவின் ஜனநாயக அரணாக மலாயா, சிங்கப்பூர், சாரவாக், புருனே, வடக்கு போர்னியோ இவற்றை உள்ளடக்கிய மலேசியாவை உருவாக்க விரும்பினார். இந்த நாடுகள் எல்லாவற்றிலும் ஆதிக்கம் செலுத்தி வந்த பிரிட்டன் இதற்கு ஆதரவைத் தந்து ஒத்துழைக்க முன்வந்தது. உடனே ருஷ்யா இதனைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத் தந்திரம் என்றது. பிலிப்பைன்ஸ் பழைய சரித்திர ஏடுகளைத் தூசு தட்டிப் பார்த்து வடபோர்னியோவில் தனக்குப் பாத்தியதை உண்டு என்று கண்டுபிடித்துக் கூறியது. இந்தோனேஷியாவின் ஆயுட்கால ஜனாதிபதியாகத் தம்மைத் தாமே பிரகடனப்படுத்திக்கொண்ட சுகர்னோ மலேசியாவைச் சொற்களால் தாக்கியது மட்டுமின்றி ராணுவ பலத்தையும் கொஞ்சம் காட்டத் தொடங்கினார். இத்தனைக்கும் இடை



# உங்கள் குழந்தையின் நலமான வளர்ச்சியை அஜீர்ணம் தாக்காது பார்த்துக்கொள்ளுங்கள்

உங்கள் சிறு குழந்தை தவழவும், உட்காரவும், நிற்கவும், நடக்கவும் பயிலவேண்டும்; அத்துடன் உடல் எடையை இரட்டித்துக்கொள்ளவேண்டும் — எல்லாம் ஒரு வருஷ காலத்திற்குள்! நலமான வளர்ச்சியை ஓர் அற்ப அஜீர்ணம் கூட பாதிக்காமல் நீங்கள் பாதுகாக்கவேண்டாமா?

அஜீர்ணம் என்று எப்போது படுகிறதோ, உடனே உங்கள் குழந்தைக்கு அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர் கொடுங்கள். அது இருந்தால் பல் முளைக்கும் பருவமும் எளிதாக அமைகிறது.

நினைவிருக்கட்டும். அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர் புகழ்பெற்ற அமிர்தாஞ்சன் வலிநிவாரணி தயாரிப்போராலேயே செய்யப்படுகிறது. உங்கள் நம்பிக்கைக்கு ஏற்றது.




**அமிர்தாஞ்சன்**
லிமிடெடின்
**கிரைப் மிக்சர்**

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ், பம்பாய், கல்கத்தா, புது டில்லி

டாக்டர் ஜகந்நாதனை வாக்கு வாதத்திலே எப்படியாவது வென்றுவிட வேண்டும் என்று துடித்த வசந்தி அது எவ்வளவு சிரமம் என்பதையும் இப்போது உணர ஆரம்பித்திருந்தாள். எனினும் விட்டுக் கொடுக்காமல் அவர் தற்பெருமை அடித்துக் கொள்வதாகக் குற்றம் சாட்டினாள். அதைக் கேட்டதும் ஜகந்நாதன், ''ஒருவன் தன்னைப் பற்றித் தானே பெருமைப்படா விட்டால் அவனுக்கு உண்மையான பெருமை வேறு என்ன இருக்க முடியும்?'' என்று கேட்டார்.

''ஸார்! நீங்கள் எதற்கும் ஒரு குதர்க்கமான பொன்மொழியை வைத்திருக்கிறீர்கள்!''

''அதுதான் புத்திசாலி தப்புவதற்குச் சரியான வழி!'' என்று ஜகந்நாதன் புன்முறுவல் பூத்துவிட்டு, ''புகழ்ச்சியை விரும்புவது போலப் பெண்கள் பரிகசிக்கப்படுவதையும் சில சமயங்களில் விரும்புவார்கள்!'' என்றார்.

''ஆனால் தன் உணர்ச்சியைப் பரிகசிப்பதை எந்தப் பெண்ணும் விரும்ப மாட்டாள்!''

''உண்மைதான்! ஆண்களின் அறிவு அனைத்தும் பெண்ணொருத்தியின் ஓர் உணர்ச்சிக்கு ஈடாகாது என்று ஒரு மேல்நாட்டு அறிவாளிகூடச் சொல்லியிருக்கிறார்!'' என்று மற்றொரு பொன்மொழியை உதிர்த்த ஜகந்நாதன் விஷமமாக வசந்தியின் கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''ஆனால் உணர்ச்சிகளை வைத்தே விளையாட நினைக்கும் பெண்களும் இருக்கிறார்கள்!'' என்றார்.

வசந்தி உம்மென்று ஒருகணம் அவரைப் பார்த்து விட்டு, ''ஸார்! உங்கள் நாவல்களில் அறிவின் சிதறல்கள் இருக்கின்றனவே தவிர உணர்ச்சிகளுக்கே இடமில்லை. உள்ளம் உருக்கும் சம்பவம் ஒன்றைக் கூடப் பார்க்க முடிவதில்லை! நீங்கள் பெரிய 'ரியலிஸ்டிக்' நாவலாசிரியர் என்கிறார்கள். ஆனால் உங்கள்



கதாபாத்திரங்களுக்கெல்லாம் இருதயம் இருப்பதாகவே தெரியவில்லை''என்றாள்.

''அதற்குக் காரணம் எனக்கென்று சொந்தமாக ஓர் இருதயம் இல்லாதது தான்! ஒரு வேளை ஒரு பெண் இருதயம் துணை புரிந்திருந்தால் என் நாவல்களை வேறு விதமாகவும் எழுதியிருக்க முடியும்!'' என்ற ஜகந்நாதன் ஏதோ யோசித்து விட்டு வசந்தியைக் குறுகுறு வென்று பார்த்துக் கொண்டே, ''நீயும் ஒரு நாவல் எழுதலாமே!'' என்றார்.

''என்ன? உங்களுக்குப் போட்டியாக என்னை எழுதச் சொல்கிறீர்களா, ஸார்?'' என்று கேட்டாள் அவள்.

''இல்லை. நாம் இருவரும் சேர்ந்தே ஒரு நாவல் எழுதிப் பார்க்கலாம்! அதை நம் இருவர் பெயராலுமே வெளி யிடுவோம்! உன் சொந்தப் பெயரை வெளியிட லஜ்ஜைப்பட்டால் நீ ஏதாவது புனைபெயரைச் சூட்டிக் கொள்ளலாம்!''

வசந்தி திகைத்தாள். அளவில்லாத வியப்போடு ஜகந்நாதனை ஏறிட்டுப் பார்த்தாள். பிரபல நாவலாசிரியரான ஜகந்நாதனே தம்மோடு சேர்ந்து ஒரு நாவல் எழுதும்படி தன்னை அழைப்ப தென்றால்? அந்த எண்ணமே அவளை அதிக வியப்பில் மட்டுமல்ல, ஆனந்த வெள்ளத்திலும் அமிழ்த்தி அவளது உள்ளம் உணர்விலெல்லாம் இனித்தது.

''என்ன வசந்தி! உனக்குச் சம்மதம்தானே?''

''ஆனால்.....''

''ஆனாலென்ன? நாவல் எழுதுவது பெரிய வித்தையல்ல! அதற்குப் பிறவித் திறமை வேண்டுமென்று சொல்வதெல்லாம் சுத்த ஹம்பக்! எல்லாம் பழக்க வாசனையால் சுலபமாக வந்து விடும்! யோசிக்காதே!'' என்று ஜகந்நாதன் மீனுக்குத் தூண்டில் போடுவதுபோல் உற்சாகமூட்டினார்.

வசந்திக்கு மெய்சிலிர்த்தது. ''ஸார்! உங்களுக்கு ஏற்றாற் போல் என்னால் எழுத முடியுமா?......''

''ஆண்களைவிடப் பெண்களால் சில நுட்பமான விஷயங்களை மிகச் சாதுரியமாகவும், தத்ரூபமாகவும் கையாள முடியும்! உதாரணமாக என் நாவலில் உணர்ச்சிகரமான சில பகுதிகளை நீ எழுதியிருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும் என்றுகூட உனக்குத் தோன்றும்!''

அந்தப் புகழ்ச்சியைக் கேட்டதும் அது உண்மையாக இருக்கலாம் என்றுகூட வசந்திக்குத் தோன்றியது. அவருடைய நாவல்களில்



# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

அவர் தொட்டும் தொடாமலும் விட்டிருக்கும் காதல் கட்டங்களைத் தானே எழுதியிருந்தால் இன்னும் எவ்வளவு அழகாக எழுதி யிருக்கலாம் என்று வசந்தி நினைத்தாள்.

''வசந்தி! உணர்ச்சி சம்பந்தப் பட்ட ஒரு நுட்பமான விஷயத்தை ஓர் ஆண் பார்க்கும் கோணம் வேறு! ஒரு பெண் பார்க்கும் கோணம் வேறு! இவ்விரு கோணங்களிலிருந்தும் நாம் இருவரும் ஆராய்ந்து சிந்தித்து எழுதினால் நாவல் முழுமையாக அமைந்து விடும்! முக்கியமாகக் காதல் காட்சிகள் பிரமாதமாக இருக்கும்!'' என்று ஜகந்நாதன் வசந்தியின் முதுகில் தட்டிக் கொடுக்காத குறையாகச் சிரித்தார்.

''நாவலை எப்பொழுது எழுத ஆரம்பிக்கலாம், ஸார்! கல்லூரி விட்டதும் நேரே நான் வந்து விடுகிறேன். லீவு நாட்களிலெல்லாம் உங்களோடு இருக்கிறேன்!'' என்றாள் வசந்தி.

''நாளையே ஆரம்பிக்கலாம்! ஆனால் ஒரு விஷயம்.....'' என்று ஜகந்நாதன் மெல்லக் குரலை இழுத்தார்.

''என்ன ஸார்?'' என்று வசந்தி பரபரப்போடு கேட்டாள்.

''காதலை வைத்து விளையாடி எவ்வளவு பெரிய அறிவாளியையும் மகா முட்டாளாக்கி அவரை அழ அழ வைக்க முடியும் என்று ஒரு சித்தாந்தம் நீ வைத்துக் கொண்டிருந்தாயே, அதைக் கைவிட்டு விட்டாயா?''

வசந்திக்கு மறுபடியும் வெட்கத்தால் முகம் சிவந்தது. தலைகுனிந்து கொண்டாள் அவள்.

''இதை ஏன் முன்னதாகக் கேட்கிறேன், தெரியுமா? ஒருவேளை அந்தச் சித்தாந்தத்தை என் மீதும் உபயோகப் படுத்தி அதற்கு என்னை உரைகல்லாக்க நீ உண்மையிலேயே நினைத்திருந்தால் கடைசியில் நீதான் அழுதழுது அயர்ந்து போக நேரிடும்! எனக்குக் கண்களில் கிளிஸிரின் போட்டால் கூடக் கண்ணீர் வராது.. ..!''

''ஸார்!... நான்..... நான் ஏதோ அப்போதையச் சூழ்நிலையில் அப்படிச் சொன்னேனே தவிர 'சீரியஸா'கக் கருதவில்லை!''

''அது எனக்குத் தெரியும் வசந்தி! நீ ஜம்பமாக ஆணாக மாற விரும்பினாலும் உள்ளுணர்வில் நீ ஒரு பெண்தான்! அது உன்னை விட எனக்கு மிக நன்றாகத் தெரியும்!''

வசந்தி தன் கரு விழிகளில் நன்றிப் பெருக்கோடு அவரை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தாள்.

''என்னை அழ வைப்பதற்காக ஒரு பெண் காதலிப்பதைவிட, என்னைச் சிரிக்க வைப்பதற்காகக் கொஞ்சம் காதலித்துப் பார்க்கலாம்! பெண்களின் கண்களுக்கு அதி கவர்ச்சிகரமானவன், கருத்துக்கும் ரசனையானவன் என்று நான் பிரபலமடைந்தவன்!'' என்றார் ஜகந்நாதன். அவருடைய குரலும் கண்களும் வசந்தியைக் கிண்டல் செய்தன. என்றாலும் அவளையும் மீறி அவளை வசீகரிக்கவும் செய்தன.

''நீங்கள் சீரியஸாகச் சொல்கிறீர்களா, ஸார்?'' என்று வசந்தி மெல்லக் கேட்டாள். அதைக் கேட்கும்போதே அவள் முகம் இலேசாக வியர்த்து, அவளுடைய உடலெல்லாம் ஓர் இன்ப நடுக்கம் பரவியது.

ஜகந்நாதனே சிரித்துக் கொண்டே, ''காதலை சீரியஸாக எடுத்துக் கொள்ளாதே, வசந்தி! அதில்தான் பெரும்பாலும் பெண்கள் பிசகு செய்கிறார்கள்! தங்களுக்கு ஆனந்தமளிப்பதற்குப் பதிலாக அவ்வுணர்ச்சிகளே தங்களை அடிமை கொள்ளும்படி விட்டு விடுகிறார்கள். நான் எத்தனையோ பெண்களின் காதலுக்கு ஆளாகியிருக்கிறேன்; ஆனால் நான் அழுது ஏங்கும்படி எந்தப் பெண்ணையுமே காதலித்ததில்லை; காதலிக்க வேண்டுமென்று உத்தேசிக்கவும் இல்லை! காதல் என்பது ஒரு சுவாரஸ்யமான விளையாட்டு! அதைச் சுலபமாகக் கையாண்டு, சுலபமாகக் கைவிட்டுப் போகும்படி விளையாடும் போதுதான் அது மிகக் கவர்ச்சிகரமானதாகவும், அதி ஆனந்தமூட்டக் கூடியதாகவும் விளங்குகிறது. அது நம்மைக் கட்டிப் போட்டு ஒரு மூலையில் தள்ளவோ, அல்லது நம்மைக் கண்ணீர்க் கடலுக்குள் தள்ளவோ இடம் கொடுத்து விட்டால், அந்தக் காதலே ஒரு சைத்தானாக மாறி நம்மை இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு விடும்! பிறகு அந்தப் பிடியிலிருந்து மீள மாட்டோமா, மறுபடியும் சுதந்திரத்தையும் வெளிக்காற்றையும் அனுபவிக்க மாட்டோமா என்று திண்டாட நேரிடும்! பொதுவாகக் காதல் என்பது ஒரு பாரமாக இல்லாமல் இலகுவாய் இருக்கும்போதுதான் வாழ்க்கையின் ஆனந்தத்தை அனுபவிக்க முடியும்! அப்போதுதான் ஜீவனும் சுதந்திரமாக இருக்க முடியும்!'' என்றார்.

அவரை வசந்தி உற்றுப் பார்த்தாள். அவர் கூறிய காதல் தத்துவத்தில் பல நுட்பங்கள் அவளுக்குப் புரியவில்லை. ஆனாலும் அவரோடு பேசிக் கொண்டிருப்பதிலேயே அவளுக்குப் புளகாங்கிதம் உண்டாயிற்று. அவரோடு

சேர்ந்து ஒரு நாவல் எழுதுவதென்றால் அதைவிடத் தனக்குக் கிடைக்கக் கூடிய பெருமையோ, உற்சாகமான பொழுதுபோக்கோ வேறெதுவும் இருக்க முடியாதென்று நினைத்தாள் வசந்தி.

சுவர்க் கடிகாரத்தில் இரவு மணி எட்டடித்தது.

''வசந்தி! உன் வீட்டில் அப்பா அம்மா உன்னைத் தேடுவார்கள். வீட்டுக்குப் போ! நானும் 'பேஷண்டு'களை (நோயாளிகளை)க் கவனிக்கப் போய் 'பேஷென்ஸ்' (பொறுமை) கற்றுக் கொள்ள வேண்டும்!'' என்று ஜகந்நாதன் சிரித்தார்.

''நாளை ஒரு புதுப் பேனா வாங்கிக் கொண்டு வருகிறேன், ஸார்!'' என்று வசந்தி உற்சாகமாகச் சொல்லி விட்டுக் குதூகலப் பந்துபோல் குதித்தோடினாள்.

அன்றிரவு அவள் சாப்பிடாமலே தன் மாடியறைக்குச் சென்று கட்டிலில் படுத்துக் கொண்டாள்.

அவளுடைய கனவுகளில் ஜகந்நாதன் சஞ்சரித்துக் கொண்டிருந்தார். அவரும் அவளும் சேர்ந்து எழுதும் நாவல் வெளியாகிப் பொதுஜனங்கள் புகழும் போதும், பத்திரிகைகளின் விமரிசனங்களுக்கோ கண்டனங்களுக்கோ ஆளாகும் போதும் அவளுக்கு எவ்வளவு பெருமை உண்டாகும்? அவளையும் பிரபல நாவலாசிரியரான ஜகந்நாதனையும் ஒன்றாக ஜோடி சேர்த்து மற்றப் பெண்கள் பார்க்கும் போதும் அப்பெண்களின் கண்களிலெல்லாம் எவ்வளவு பொறாமை விரியும்.......?

அதை நினைக்கும்போது தூக்கத்திலும் வசந்தியின் புத்திளம் உதடுகளில் அலாதியான ஒரு புன்முறுவல் விளையாடியது.

### அத்தியாயம் நாற்பது

## மனத் தவிப்பு

திரிபுரசுந்தரியம்மாளின் வீட்டுக்குள் உமா நுழைந்ததுமே அவளை நோக்கி ''டீச்சரக்கா!'' என்று சிறுமி ராஜி கூவிக் கொண்டே ஓடி வந்து, ''உங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கு, டீச்சரக்கா!'' என்றாள்.

''எனக்கா?..... எனக்கு யார் எழுதப் போகிறார்கள்?'' என்று வியப்புடன் கேட்ட உமா ஏதோ யோசித்து விட்டு, ''ஏதாவது குழந்தைதான் எனக்கு வேடிக்கையாகக் கடிதம் எழுதியிருக்கும்!'' என்று சிரிக்க முயன்றாள்.

''இல்லை, உமா! இவ்வளவு கனமான கடிதத்தை எழுதக் குழந்தைக்குப் பொறுமையிருக்காது! கையும் வலிக்கும்!'' என்று டாக்டர் ஜகந்நாதன் சிரித்துக் கொண்டே ராஜியின் பின்னால் வந்து நின்று, ''உமா! உனக்குக் கன்யாகுமரியிலிருந்து கடிதம் வந்திருக்கிறது. இதோ பார்! உறையின் மீது அனுப்பியவரின் பெயர் 'பி. ம.' என்று மட்டும் போடப்பட்டிருக்கிறது!'' என்று கூறினார்.

அந்தக் கடிதம் பிச்சுமணியிடமிருந்து தான் வந்திருக்கிறது என்பதை உமா உணர்ந்து கொண்டாள். உடனே அவள் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது.

''உமா! எங்கள் வீட்டு விலாசத்துக்கு உனக்குக் கடிதம் அனுப்பும் இந்தப் 'பி. ம.' யார்? பிறவி மடையனா?'' என்று டாக்டர் ஜகந்நாதன் கிண்டலாகக் கேட்டார்.

''இல்லே, சித்தப்பா! 'பி. ம.' என்றால் நம்ம பிச்சுமணிதான்!'' என்று சிறுமி ராஜி உற்சாகமாகக் கைகொட்டிக் குதித்தாள்.

''ஓ! அந்த மேஜர் வீட்டுப் பையனா? தாத்தாவோடு தீர்த்த யாத்திரை போயிருக்கும் அந்தப் பையன் விபூதி குங்குமப் பிரசாதம் வாங்கியனுப்பியிருப்பான் என்று நினைக்கிறாயா?''

''அது மட்டுமில்லே, சித்தப்பா! கன்யா குமரியிலே மூன்று கடல் கூடுகிறதாம்! அதனாலே மூன்றுவிதமான மணல் இருக்குமாம்! ஒவ்வொரு நிறுக மணலிலும் கொஞ்சம் அள்ளிக்கொண்டு வரச் சொல்லியிருக்கேன்!''

''கொஞ்சமென்ன! உன் டீச்சர் அக்கா சொல்லியிருந்தால் மூன்று லாரி நிறையக் கொண்டு வந்து கொட்டுவான்!'' என்று கூறி, ஜகந்நாதன் தமாஷாகக் கண்ணைச் சிமிட்டினார்.

உமா சட்டென்று தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''சித்தப்பா! நம் பிச்சுமணி கன்யாகுமரிக்கு மட்டுமல்ல, திருச்செந்தூர், குற்றாலம் முதலான ஊர்களுக்கும் 'டூர்' போயிருக்கிறானும்! அங்கே அவன் பார்த்த அதிசயங்களை யெல்லாம் எழுதியிருப்பான்!'' என்று ராஜி குதூகலத்தோடு சொல்லி விட்டுத் தன் இரு கைக

தமிழக அரசாங்கத்தின் தயாரிப்பான அப்பளங்களை விற்பனை செய்ய முடியாமல் போனதால் அப்பளத் தொழிற்சாலைகளை மூடிவிட முடிவாகியது. எனினும் இதன் விளைவாக வேலையிழந்த மூந்நூறுக்கு மேற்பட்ட அம்மாமிகளின் நலனைக் கருதியும், அப்பளாம் விற்பனையில் அரசினருக்கு ஏற்படும் சங்கடங்களை நீக்கவும் வசதியாக, அப்பளாம் தயாரிப்புத் தொழிலைத் தேசியமயமாக்கி அதன் விற்பனை உரிமையை ஸ்டேட் டிரேடிங் கார்ப்பொரேஷனின் ஏகபோகமாக்கி விடலாமா என்று மேலிடத்தில் யோசனை உருவாகி வருகிறது.



ஃ ஃ ஃ

பிரிட்டனில் உள்ளோர் சராசரியில் வாரத்துக்கு மூன்று முறைதான் பல் தேய்க்கிறார்கள். பற்பசை மீது விதிக்கப்படும் வரிகளைக் குறைத்தால் அவர்கள் தினமும் பல்தேய்ப்பார்கள்.

—லண்டன் பற்பசை தயாரிப்போர் சங்கத்தலைவர்

''இங்கே யுள்ளோர் சராசரியில் வாரத்துக்கு மூன்று முறைதான் முழு வயிற்றுக்குச் சாப்பிடுகிறார்கள். வரிகளையும் இட்டங்களையும் பண வீக்கத்தையும் குறைத்தால் இவர்கள் தினம் ஒரு முறை முழு வயிற்றுக்குச் சாப்பிடுவார்கள்.''

—சராசரித் தமிழன் சங்கத் தலைவர்

ளாலும் உமாவைக் கட்டிக் கொண்டு, ''டீச்சரக்கா! அதை யெல்லாம் எங்களுக்குப் படிச்சுக் காட்டுங்க 'டீச்சரக்கா!'' என்று துடிதுடித்தாள்.

''முதலில் பாடத்தைப் பார்க்கலாம் ராஜி! அதுதான் முக்கியம்!'' என்றாள் உமா, அந்தக் கடிதத்தையே அலட்சியப்படுத்துவது போல்! ஆனாலும் அதை ஜகந்நாதனிடமிருந்து வாங்கி, அவள் தன் கைப் பைக்குள் வைத்துக் கொள்ளும் போது அவள் இருதயம் குலுங்கியது. கடிதத்தைப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவலும் அவளையும் மீறி அவள் உணர்வெங்கும் ஏனோ கிளர்ந்தெழுந்தது.

அதனால் குழந்தைகளுக்கு டியூஷனை அவசரம் அவசரமாகச் சொல்லி முடித்து விட்டு உமா வழக்கத்துக்கு முன்னதாகவே தன் வீட்டுக்குக் கிளம்பினாள். பாடம் சொல்லிக் கொடுப்பதில் அவள் அவ்வளவு அவசரமும், அசிரத்தையும் காட்டியது அவள் வாழ்க்கையில் அதுதான் முதல் தடவை!

''டீச்சரக்கா! பாடம்தான் முடிந்து விட்டதே! நம்ம பிச்சுமணியின் கடிதத்தை இப்பப் படிச்சுக் காட்டுகிறீர்களா?'' என்று சிறுமி ராஜி கல்மிஷமில்லாமல் மீண்டும் கேட்டாள்.

உமாவின் நிலை மீண்டும் தர்மசங்கடமாகி விட்டது.

அவள் சார்பாக டாக்டர் ஜகந்நாதன் குறுக்கிட்டு, ''உங்கள் டீச்சரக்காவுக்கு இப்போது தலைவலியை உண்டாக்காதீர்கள்! டீச்சரக்கா தன் வீட்டுக்குப் போய்ப் பிச்சுமணியின் கடிதத்தைச் சாவகாசமாகப் படித்து விட்டு நாளை வந்து உங்களுக்கெல்லாம் விளக்கிச் சொல்லுவாள்! ஏனென்றால், பிச்சுமணி எழுதுகிற பாஷை உங்களுக்கெல்லாம் புரியாது!'' என்று சிரித்து விட்டு உமாவை வழியனுப்பும் விதமாக அவளோடு தெரு வாசல் வரை வந்து நின்று, ''உமா! கடிதத்தின் மேல் பிச்சுமணி கிறுக்கியிருக்கும் கையெழுத்தைப் பார்த்தால் அவசரம் அவசரமாக ஏதோ ஓர் அசுர வேகத்தில் எழுதியிருக்கிறான் என்று தோன்றுகிறது! இப்படிப்பட்ட கனமான கடிதத்தை நானாக இருந்தால் உடைத்துக் கூடப் படிக்காமல் நெருப்புக் குச்சியை உரசிக் கொளுத்தி விடுவேன்! ஏனென்றால், அவன் இதில் எழுதியிருக்கக் கூடிய வசனங்களை எந்த மடையனும் எழுதலாம்!'' என்று விஷமமாகச் சிரித்தார்.

டாக்டர் ஜகந்நாதன் எதையும் தமாஷாகப் பாவித்துப் பேசக் கூடியவரானதால் அவருடைய வார்த்தைகளை உமா லட்சியம் செய்யவில்லை.

''டாக்டர்! வசனங்கள் இருதயத்திலிருந்து வரும் போதுதான் அர்த்த முள்ளவையாக இருக்கும்!'' என்றாள் உமா. ஆனால் அடுத்த கணமே ஏன் அப்படிச் சொன்னோம் என்று தன் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

''வெறும் வசனங்கள்கூட ஓர் இருதயத்தை உடைத்து விடுவது உண்டு, உமா! உதாரணமாகச் சினிமாக்களைப் பார்! யாரோ ஒரு வசனகர்த்தா எழுதிக் கொடுத்த உருக்கமான வசனங்களை யெல்லாம் யாரோ ஒரு நட்சத்திரம் மனப்பாடம் செய்து காசுக்காக உணர்ச்சிகரமாகக் கொட்டும் போது அதைப் பார்க்கும் கல்நெஞ்சர்கள்கூடக் கண் கலங்குகிறார்கள்!'' என்று ஜகந்நாதன் சொல்லி விட்டு ஒருவித அர்த்த பாவத்தோடு உமாவை உற்றுப் பார்த்தார்.

(தொடரும்)

# ரெக்ஸ் அருந்தி... குளுமையுடன் இருங்கள்



இலவசம்-ரெக்ஸ்
மூடிகள் ஆறு தருவோ
ருக்கு அழகியதொரு
ரெக்ஸ்ப்ளோ டிஸ்
பென்ஸர் தரப்படும்.




மேங்கோ ஸ்குவாஷ்,
ஆரஞ்ச் ஸ்குவாஷ். ஆரஞ்ச் க்ரஷ்,
லெமன் ஸ்குவாஷ்,
லைம் ஜூஸ் கார்டியல்,
லெமன் பார்லி,
கோலா கான்ஸென்ட்ரேட்,
ரோஸ் ஸிரப், ராஸ்ப் பெர்ரி ஸிரப்,
பைனாப்பிள் ஸிரப் மற்றும்
ஸ்ட்ராபெர்ரி ஸிரப்.

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ.**
**(இந்தியா) ப்ரைவேட் லிட்.**

'ப்ரான்ஸென்ட்' உணவுப் பொருள்களுக்கு
பாரதத்தில் தலைமைவகிப்பவர்கள்.



## ஏழாம் அத்தியாயம்

**க**ல்யாணத்துக்கு வந்திருந்த அனைவரும் ஊருக்குச் சென்று விட்டனர்.

சுசிலா முன்னைவிட உற்சாகமாகக் காணப்பட்டாள். கழுத்தில் மின்னிய மஞ்சள் கயிறு அவளுக்குப் புதிய ஒளியைக் கொடுத்தது. பத்து நாட்களில் அவள் உடல் மேலும் பூரிப்பில் பருத்தது. காலையில் ஒரு புடவையும் மாலையில் ஒரு புடவையுமாக மாற்றி மாற்றி அவள் அழகுபடுத்திக் கொண்டாள்.

தியாகுவிடம்தான் ஒரு மாறுதல் காணப்பட்டது. இவ்வளவு சிரித்துச் சிரித்து ஒட்டிப் பழகியவன் இப்போது அதிகமான சிரிப்பை அடக்கிக் கொண்டான். சுசிலாவைச் சீண்டி விட்டு வேடிக்கை பார்த்தவன் அவளிடம் சாதாரணமாகப் பேசினான்.

யசோதை இதை உன்னிப்பாகக் கவனித்தாள். சுசிலா இல்லாத நேரத்தில் ஒரு நாள் அவனிடம் கேட்கவே கேட்டு விட்டாள். ''தியாகு! உன் சம்மதத்தையும் பெற்ற பிறகுதானே சுசிலாவின் அப்பா விவாகத்துக்கு நிச்சயித்தார்? நீயும் விவாகத்தின் போது குதூகலமாகத்தானே இருந்தாய்? இப்பொழுது மட்டும் ஏன் ஒட்டிப் பழகாமல் அவளிடமிருந்து ஒதுங்கி நிற்கிறாய்?'' என்று சற்றுக் காரமாகவே அவள் கேட்டு விட்டாள்.

''நீயாக ஏதாவது நினைத்துக் கொள்ளாதே, யசோதை! எப்பொழுது, 'இவள் என் மனைவி' என்று சுசிலாவைக் கைப்பிடித்து விட்டேனோ அப்பொழுதே என்ன கஷ்டம் வந்தாலும் அவளை என் மனைவி ஸ்தானத்திலிருந்து ஒருவராலும் விலக்கி விட முடியாது என்பதை உறுதியாக நம்பு. நான் ஒருவருக்கும் வஞ்சகம் செய்துவிட மாட்டேன்'' என்று கூறி விட்டான் அவன்.

சுசிலாவுக்கும் தியாகுவின் போக்கு சற்று வியப்பை அளித்தது. ஆனால் அவள் அதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள வில்லை. யசோதையோ அவள் தந்தையோ இல்லாத நேரங்களில் அவன் குழைந்து குழைந்து அவளிடம் பேச வந்த போது அவள் புளகாங்கித மடைந்தாள்.

அன்று யசோதை தீர்மானித்து விட்டிருந்தாள். விவாகத்துக்கு முன்பு தினமும் சினிமா, நாடகம் என்று போகத் துடித்து, அவர்களையும் இழுத்துச் சென்ற தியாகு இப்பொழுதெல்லாம் அவர்களைக் கூப்பிடாமலே வெளியில் சென்று கொண்டிருந்தான். யசோதை அன்று அவனுக்கு உத்தரவு போட்டு விட்டாள். ''தியாகு! இன்று வெலிங்டனில் புதிய படம் ஒன்று வந்திருக்கிறது. சுசிலாவை அழைத்துக் கொண்டு போ.''

''ஆமாம், சித்தி! ரொம்பவும் நன்றாக இருக்குமாம். காட்சி ஜோடனைகள் பிரமாதம். பிரபல நடிகர்கள் அனைவரும் கூட்டாக நடித்தது. கண்டிப்பாகப் போக வேண்டும்...... சீக்கிரம் கிளம்பு......'' சுசிலா அப்பொழுதே தயாராகி விட்டாள்.

''நான் வரவில்லை சுசிலா. சினிமா பார்த்தால் கண்ணை வலிக்கிறது. நீ போய் வா'' என்று யசோதை கூறினாள். தியாகுவுக்கும் சுசிலாவுக்கும் காவலாக



இது நாள் வரை சென்றதுபோல், அப்புது மணத் தம்பதிகளுக்கிடையே இப்பொழுதும் போவதை அவள் விரும்பவில்லை.

''போ, சித்தி..... உனக்கு வெளியே போவதானால் என்றுமே அழுகைதான்'' என்று சிணுங்கிய சுசீலா, தியாகுவை நோக்கி, ''நீங்கள் வாருங்கள். நாம் இருவரும் போய் விட்டு வரலாம். நேரமாகி விட்டது'' என்றாள்.

''யசோதையில்லாமல் அங்கு எதற்குப் போவது? நாம் கல்கத்தாவில் வேண்டிய படங்கள் பார்த்துக் கொள்ளலாம்'' என்று கூறி விட்டான் தியாகு.

'' ஆமாம், கல்கத்தாவில் தமிழ் சினிமா பார்க்கப் போகிறாயாக்கும். நான் சொல்கிறேன், நீ கிளம்பப் போகிறாயா, இல்லையா? மாமியாருக்கு அடங்கிய மாப்பிள்ளையாகவே இருந்து கொள்.'' யசோதை வேடிக்கையாகவே கூப்பாடு போட்டான்.

''இந்த மாப்பிள்ளையிடம் அதிக அதிகாரம் காட்டினால் இவர் முரண்டு விடுவார் என்பதும் நினைவிருக்கட்டும்.'' தியாகுவும் வேடிக்கையாகவே தட்டிக் கழிக்கப் பார்த்தான்.



எஸ். ரங்கநாயகி

யசோதை சளைக்கவில்லை. இருவரையும் கட்டாயப்படுத்திக் கிளப்பினாள்.

வாசற்படி இறங்கும் தருவாயில் திடீரெனத் தந்திச் சேவகன் வந்து நின்றான். தியாகுவுக்கு ஒரு தந்தி வந்திருந்தது.

பட படக்கும் உள்ளத்தோடு யசோதையும், சுசீலாவும் அவனை நோக்கினர். தந்தியைப் படித்த தியாகுவின் முகத்தில் எல்லையற்ற துயரம் படிந்தது. தந்தியைச் சுக்கல் நூறாகக் கிழித்து விட்டான். அவற்றைத் தன் ஷர்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டான். ''சுசீலா! என் மனம் சரியாக இல்லை. நாம் இன்னொரு நாள் சினிமாவுக்குப் போகலாம்'' என்றான் தியாகு.

''எங்கிருந்து தந்தி?..... அப்பாவுக்கு உடம்பு கிடம்பு.....'' யசோதை நெஞ்சு படபடக்கக் கேட்டாள்.

''இல்லை, யசோதை.... இது கல்கத்தாவிலிருந்து என்னுடன் பணிபுரிபவனிடமிருந்து வந்திருக்கிறது.''

''என்ன விஷயம்? உன் மனம் சரியாக இல்லாமல் போவானேன்.....?'' யசோதை மீண்டும் கேட்டாள்.

''விஷயம் ஒன்றுமில்லை.''

''அப்படியெல்லாம் சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாதாக்கும். ஒன்றுமில்லாத விஷயத்துக்கு உன் முகம் இவ்வளவு வாட்டமடைவானேன்?'' என்று சுசீலா கேட்டாள்.

''அதைப் பற்றி என்ன கேள்வி? நான் சொல்லவில்லை என்று வைத்துக் கொள். நான் என்னுடைய இந்த மனநிலையில் சினிமா பார்க்க விரும்பவில்லை. நான் தனிமையைச் சிறிது விரும்புகிறேன். யசோதை, நான் கடற்கரை வரையில் போய்விட்டு வருகிறேன்'' என்று கூறிய தியாகு வேகமாகப் படியை விட்டு இறங்கித் தெருவில் நடக்க ஆரம்பித்து விட்டான்.

முகத்தில் கோபம் கொந்தளிக்கச் சுசீலா உடுத்த புடவையை அவிழ்த்து விட்டுக் கந்தலைக் கட்டிக் கொண்டாள். தலைப் பின்னலைக் கலைத்தாள். கண் வழியே வந்த கண்ணீர், தீட்டியிருந்த மையைக் குழைத்து முகத்தில் அப்பியது.

யசோதை செய்வதறியாது நின்று விட்டாள். தியாகுவின் போக்கே அவளுக்குப் புரியவில்லை. அவளை மணந்து

கொள்ளாதது காரணமாக அவன் வருத்தம் கொண்டு விட்டானே! அல்லது ஒரு வயதானவர் மாமாவின் பெண்ணின் வாழ்வைப் பாழடித்து விட்டாரே என்று அவரைப் பழி வாங்கும் எண்ணத்துடன் சுசீலாவை மணந்து சித்திரவதை செய்ய ஆரம்பித்து விட்டானே! மறு நாள் எப்படியாவது அவனிடம் வாதாடி இரண்டில் ஒன்று தீர்த்துவிட வேண்டும். மேலும் அதிக நாட்கள் இங்கு தங்க விடாமல் இருவரையும் கல்கத்தாவுக்கு அனுப்பிவிட வேண்டும்.....

இரவு வெகு நேரம் கழித்துத் தியாகு திரும்பிய போது சுசீலா தூங்கி விட்டிருந்தாள். யசோதை அச்சமயத்துக்கு அவனிடம் ஒன்றும் கேட்கவில்லை.

மறு நாள் தியாகு ஒன்றுமே நடவாதது போல் ஒட்டி ஒட்டிப் பழக ஆரம்பித்து விட்டான். சுசீலாவிடமும் சிரித்துப் பேசினான். சுசீலாவும் முதல் நாள் கோபத்தைச் சற்று மறந்திருந்தாள். இந்நிலையில் முதல் நாளைப் பற்றி மீண்டும் கிளப்ப வேண்டாமென யசோதையும் விட்டு விட்டாள்.

யசோதைக்கு மட்டும் மற்றோர் எண்ணமும் கூடவே உண்டாகி யிருந்தது. விவாகம் முடிந்து பல நாட்களாகி விட்டன. தியாகு நல்லவன் என்றுதான் சொல்ல வேண்டும். வாய் விட்டுக் கூறாமல் பொறுமையாக இருக்கிறான்...... சுசீலாவின் அப்பாவுக்கு இது தெரிய வேண்டாமா? மாடி அறையை இந்தக் குழந்தைகளுக்கு விட்டுக் கொடுத்தால்தான் என்ன...?

அவள் முன் போல் பயப்படவில்லை. இப்பொழுது அவள் துணிவாகத்தான் மாடிக்குச் சென்று கணவருக்கு எதிரே நின்றாள்.

''நாளைக்கு நாள் நன்றாகத்தான் இருக்கிறது. மெத்தைகளை மட்டும் வாங்கி வந்து விடுங்கள். குழந்தைகள் ஊருக்குப் போகும்வரை நீங்கள் மாடி அறையை ஒழித்து விட்டால் நலம்....''

ராஜு அவளை ஏறிட்டு நோக்கினார். அவர் எதிர்பார்த்ததற்கு மேலாக யசோதை அமைந்து விட்டது குறித்து அவர் மனத்தில் சிறிது பூரிப்பு ஏற்பட்டது. சுசீலாவுக்கு அவர் தந்தை. இதைப் பற்றிச் சிந்திக்காமலிருந்துவிட்டது குறித்து மனம் நொந்தார்.

''ஆகட்டும். யசோதை. நானே நான் வாசல் வராந்தாவில் படுத்துக் கொள்கிறேன்.''

யசோதை படி மூலம் இறங்கி வந்த போது அவள் மனமும் தவித்தது.... வராந்தா! இந்த வீட்டில் அவருக்கு இடமில்லையா? அவர் மனத்தில் அவளுக்குச் சிறு இடம் கொடுக்க அவர் மனம் இரங்கவே இரங்காதா?

சுசீலாவுக்குப் பட்டுப் புடவையும் தியாகுவுக்கு வேஷ்டியும் வாங்கி வந்தாள் யசோதை. திரட்டுப்பால் கிளறப் பாலுக்கு ஆர்டர் கொடுத்தாள். பழமாக வாங்கிக் குவித்தாள்.

மறு நாள் காலை மெத்தைகள் வந்து இறங்கிய போதுதான் தியாகுவுக்கு விஷயம் புரிந்தது.

அவன் கோபத்தோடு குதித்தான். ''யசோதை! உன்னை யார் இந்த ஏற்பாடெல்லாம் செய்யச் சொன்னது?'' யசோதை துணுக்குற்றாள். ''என்ன கேள்விடா இது? விவாக தினத்தின் போதே இது முடிந்திருக்க வேண்டும்.... உனக்கு அம்மா, அப்பா நான்தானே... அப்பா ஊருக்குப் போகும்போது இந்தப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து விட்டார்.... பேசாமல் சொன்னபடி கேள்...... பெரியவர்கள் ஏற்பாடு......''

''இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குப் பெரியவர்கள் அவசியமில்லை. நீ தலையிடாதே. கண்டிப்பாகச் சொல்லி விட்டேன். லீவு முடிந்ததும் சுசீலாவை என்னுடன் அழைத்துப் போகப் போகிறேன். நல்ல நாளாகத்தான் போய் இறங்குவோம்......''

யசோதை கண்களில் தீப்பொறி பரக்கக் கூறினாள். ''தியாகு! நீ என் விருப்பம் போல் நடக்காவிடில் நான் இன்று முழுதும் சாப்பிட மாட்டேன். இது நிச்சயம்'' என்று கர்ஜித்தாள்.

தியாகுவே சற்று அதிர்ந்து நின்று விட்டான். அவன் என்ன சொல்லியும் அவள் ஒப்பவில்லை. அப்பொழுதுதான் வெளியே போயிருந்த சுசீலா வீடு திரும்பினாள். தியாகுவைக் கண்டதும் அன்று அவளுக்குப் புதிதாக வெட்கம் சூழ்ந்தது. உள்ளே ஓடி விட்டாள் அவள். தங்கப் பதுமை போன்ற அவளைப் பார்த்துக் கிறக்கம் கொண்ட தியாகு வைத்த கண் வாங்காமல் அவளையே நோக்கினான். அவள் உள்ளே சென்று மறைந்த போதும் அவளது எழிலுருவம் கண் முன் நின்றது.

திரட்டுப் பால் மணம் உள்ளிருந்து வந்தது. வாசலிலோ தியாகுவின் பெயருக்கு அவசரத் தபால் ஒன்று வந்தது. தியாகு அதைப் பிரித்துப் படித்தான். மீண்டும் அவன் முகத்தில் எல்லையற்ற துயரம் படர்ந்தது.

''யசோதை! நான் இன்று இரவே கல்கத்தாவுக்குப் புறப்படுகிறேன்....'' என்று கூவினான்.

நெருக்கமான நெசவு. நீடித்த உழைப்பு.
பூர்த்தியழகு எல்லாவற்றிலும்

# கோத்தாரி மல்கள்

## மேம்பட்டவை

### லாங்கிளாத்துகளுங் கூட!

...ஏனென்றால்

- கோத்தாரி மல்கள், லாங்கிளாத்துகளை தயாரிக்க பயன்படும் நூல் உயர்ந்தரகக் கோத்தாரி நூலாகும்.
- சுயமாக இயங்கும் விசைத்தறியில் நூலிழைகள் நெருக்கமாக நெய்யப்படுகின்றன.

எப்பொழுதும் கோத்தாரி மல் எம். 7 என்றும்
லாங்கிளாத் எல். 1 அல்லது எல். 2 என்றும்
பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.

இந்த டிரேட் மார்க்கையும்
கவனியுங்கள்







தயாரிப்பாளர்கள்:
**கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்**

சிங்காநல்லூர், கோயமுத்தூர்.
[illegible]—
இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் இன்ஸ்டிடியூஷன்
மானேஜிங் ஏஜண்டுகள்:
**கோத்தாரி & ஸன்ஸ்**
ஓரியண்டல் பில்டிங்ஸ்,
அரமனைக்காரச் தெரு,
சென்னை-1.

KTZ-1736A TH.

# இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை

## பிளாசா · கிரௌன்

## புவனேசுவரி

## சீனிவாசா

(மேற்கு மாம்பலம்)

மற்றும் தென்னாடெங்கும்



நடேஷ் ஆர்ட் பிக்சர்ஸ்

# என் கடமை



புரொட்யூஸர் & டைரக்டர்

## எம். நடேசன்



## ஒரு ருஷ்யத் திரைப்படம்

போரின் பயங்கரத் தன்மையையும் அதனால் விளையும் அழிவையும் பஞ்சத்தையும் நன்கு சித்திரித்து, காண்போர் உள்ளத்தைத் துயர வெள்ளத்தில் ஆழ்த்திய உன்னத சித்திரம் 'இவானின் பால்யப் பருவம்'. வெனிஸ் திருவிழாவில் பரிசு பெற்ற இந்தத் திரைப் படத்தில் அனைவரது கவனத்தையும் கவர்ந்த நட்சத்திரம் சிறுவன் கோல்யா. துயரத்தையும் தீரத்தையும் நன்கு உணர்ந்து நடிக்கிறான். தாய் தந்தையர், தங்கை இருந்தவரை இவானின் வாழ்க்கை சந்தோஷமாகக் கழிந்தது. அவன் பன்னிரண்டாவது வயதில் அநாதையாகி விட்டான். பிறகு தன் துயரத்துக்குப் பழி வாங்கத் துடித்த அவன் சோவியத் படையில் சேர்ந்து, தன் உயிரையும் பொருட்படுத்தாது எதிரியின் உளவறிந்து கொணர்ந்து சேர்க்கிறான். ஒரு நாள் இவான் எதிரிக் கோட்டையில் முன்னேறிச் சென்றவன் திரும்பவில்லை. போர் முடிந்த பிறகு எதிரியின் கொடுங்கோன்மைகளெல்லாம் தெரிய வருகின்றன. பச்சிளம் பாலகர்களைக் கொன்ற எதிரிகளின் பயங்கரச் செயல்களையும் இடிந்து தகர்ந்த கட்டடங்களையும் படத்தில் கிடுகிடென்று காட்டிப் பார்ப்பவர் மனத்தை உருக்கி விடுகிறார்கள். டைரக்டர் டார்கோவஸ்கியின் கைவண்ணம் பல இடங்களில் பளிச்சிடுகிறது.

சென்னை மவுண்ட்ரோட் குழந்தைகள் தியேட்டரிலும் ஒடியன் தியேட்டரிலும் சோவியத் நாட்டுத் திரைப்படங்களை மார்ச் 13ந் தேதியிலிருந்து 19ந் தேதி வரை சென்னை மக்களுக்குத் திரையிட்டுக் காண்பித்தனர். 'அதில் 'இவானின் பால்யப் பருவம்' என்னும் திரைப்படத்தில் நடிக்கும் இரு கலைஞர்களைப் பொருளடக்கப் பகுதியிலும் இங்கும் காண்கிறீர்கள்.

''தியாகு! என்ன விளையாட்டு இது! இன்று நீ புறப்படவே கூடாது'' என்று யசோதை கோபத்துடன் கூறினாள்.

''முடியாது. நான் போகத்தான் வேண்டும்..... சுசீலா! உன் சாமான்களையும் எடுத்து வைத்துக் கொள். உன்னையும் அழைத்துப் போகப் போகிறேன்'' என்று கூறின தியாகு தன் கையிலிருந்த கடிதத்தை நெருப்புக் குச்சியைப் பற்ற வைத்து எரித்தான்.

''தியாகு! உன் மனம் என்ன, கல்லா? நான் சொல்வதை நீ கேட்கவே மாட்டாயா?..... அன்று ஒரு தந்தி. இன்று புறப்படவைக்கும் ஒரு கடிதம்.''

''அதைப் பற்றி நீ கவலைப்படாதே, யசோதை. சுசீலாவை என் மனைவியின் ஸ்தானத்திலிருந்து நான் தள்ளவே மாட்டேன். இது சத்தியம்.''

தியாகு அதற்கு மேலே அங்கு நிற்கவில்லை. டிக்கெட் கிடைக்குமா என்று பார்க்க ஸ்டேஷனுக்கு ஓடினான். அப்பொழுதுதான் ஒருவர் பிரயாணத்தை ரத்து செய்திருந்ததால் அந்த டிக்கெட் அவனுக்குக் கிடைத்து விட்டது.

புறப்படும் நேரத்தில் யசோதை சுசீலாவின் காதோடு ரகசியமாகக் கூறினாள். ''சுசீலா! தியாகு நல்ல பையன் என்றுதான் விவாகம் செய்து கொடுத்தேன். அவன் கொஞ்சம் முரண்டு செய்தாலும் நீ தழைந்து கொடுத்து விடம்மா'' என்றாள்

''சித்தி! நீயும் அப்பாவிடம் பயப்படாமல் எல்லாப் பெண்களையும் போல் நன்றாக வாழ வேண்டும்.''

யசோதை பதில் கூறவில்லை.

தியாகு தானாகவே யசோதையிடம் தனிமையில் கூறினான்: ''யசோதை! உன்னை எனக்கு விவாகம் செய்துகொடுத்திருந்தால் எவ்வளவு உயர்வாக வைத்துக் கொள்வேனோ அதே நிலையில் சுசீலாவையும் வைத்துக் கொள்வேன்.''

ராஜு மட்டும் அவர்களை வழி அனுப்ப ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார்.

அனைவரையும் அனுப்பி விட்டு யசோதை உள்ளே திரும்பியபோது ஒரு மூலையில் கிடந்த ஒரு கவர் கண்ணில் பட்டது. அதைக் கையிலெடுத்தான். காகிதத்தை எரித்த தியாகு கவரை எரிக்க மறந்து விட்டிருந்தான். அதில் அனுப்பியவன் பெயர் — 'கீதா' என்ற பெண் பெயரைப் பார்த்ததும் யசோதையின் மனம் திடுக்கிட்டது.

தியாகுவும் சுசீலாவும் கஷ்டமில்லாமல் பிரயாணம் செய்தனர். கடைசி நேரத்தில் அந்த இரண்டாம் வகுப்




அம்மா : பரீட்சைக்காகப் படித்ததெல்லாம் நன்றாக ஞாபகம் இருக்கிறதா?

மகள் : படித்தவைகளை ஒருபோதும் மறக்க மாட்டேன். ஆனால், என்னுடைய புத்தகங்களென்றெண்ணி, மறந்து போய்த் தம்பியின் புத்தகங்களையல்லவா நான் படித்து விட்டேன்!

பில் அவர்களுக்கு இடம் கிடைத்ததே எதிர்பாராத விஷயம்தான். டிக்கெட் கிடைக்காவிடில் மூன்றும் வகுப்பிலாவது பிரயாணம் செய்து விடத்தான் தியாகு நிச்சயித்திருந்தான். அந்தக் கடிதம் கிடைத்த பிறகு மேலும் தன் பிரயாணத்தை ஒத்திப் போட அவன் விரும்பவில்லை.

சுசீலாவுக்கு எல்லாமே புரியாப் புதிராகத்தான் இருந்தது. அன்று இரவு அவள் ஆவலோடு அவனுடன் பேசிக் களிக்கலாம் என்று எதிர் நோக்கி யிருந்தாள். அதைக் குலைப்பதே போல் தியாகு திடீரென்று பிரயாணத்தை மேற்கொண்டதும், தியாகுவிடமிருந்து நாம் விலகி விடுவோமோ எனப் பயந்தாள். கல்கத்தாவுக்கு அவளையும் பிரயாணப்படச் சொன்னபோது அவளுக்கு ஆறுதலாக இருந்தது.

ஸ்டேஷனை விட்டு வண்டி புறப்படும் வரையில் ராஜு மௌனமாக இருந்தார். பிறகு அவர் கீழே இறங்கிய போது, அவர் கண்களில் நீர் திரையிட்டது கண்டு சுசீலா ஆச்சரியமடைந்தாள்.

''அப்பா!''

கண்களைத் துடைத்துக் கொண்ட ராஜு, ''சௌக்கியமாகப் போய் வாம்மா. உனக்கு ஒரு குறையும் வைக்காமல் இருக்கத்தான் ஏதேதோ செய்தேன். தியாகு உன்னை நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும்.....'' என்றார் குரல் தழுதழுக்க.

''அப்பா! நீங்கள் செய்ததெல்லாம் நன்மைக்கே என்று இப்பொழுதுதான் புரிகிறது. நீங்கள் சித்தியை விவாகம் செய்து கொண்டிருக்கா விடில் உங்களைத் தனியே விட்டு விட்டு நான் நிம்மதியாகப் போக முடியாது.... ஆனால்....''

''என்னம்மா சுசீலா?''

''உங்களுக்கு இது இரண்டாவது விவாகமாக இருக்கலாம். ஆனால் சித்தியை நீங்கள் நினைத்துப் பார்க்க வேண்டும். என்னைவிட இரண்டு வயதுதான் மூத்தவள். என்னைப் போலவே அவளுக்கும் மனத்தில் எத்தனை ஆசாபாசங்களோ! என் காரணமாக அவள் வாழ்வு மேலும் நசுங்குவதை நான் விரும்ப மாட்டேன். நம் குடும்பத்துக்கு அவள் ஒரு வரப்பிரசாதம் அப்பா. நீங்கள் அவளிடம் அன்பாக நடந்து கொள்ள வேண்டும்'' என்றாள் யாசிக்கும் குரலில்.

ராஜு தலை குனிந்து கொண்டார்.

வண்டி புறப்படுவதற்கான மணி அடித்ததும் புத்தகக் கடையிலிருந்து தியாகு ஓடோடி வந்து வண்டியில் ஏறிக் கொண்டான். வண்டி புறப்பட்டுவிட்டது. தியாகுவும், சுசீலாவும் கைகளை ஆட்டி ராஜுவிடம் விடைபெற்றனர்.

''அடேடே, குட்டிப் பாப்பா, கண்ணைத் துடைச்சுக்கிறதாக்கும்...''

கரித்துண்டு விழுந்த கண்களைச் சுசீலா துடைத்துக் கொண்ட போது தியாகு அவளைச் சீண்டக் கிளம்பி விட்டான்.

சுசீலாவின் உள்ளம் உவகையால் நிரம்பியது. பழையபடி சீண்டி விளையாடக் கிளம்பி விட்டான் தியாகு. இந்தக் குணம் ஏன்தான் இத்தனை நாட்கள் விடைபெற்றிருந்ததோ!

''உங்களோடு வருவதற்குக் கண்ணைக் கரிக்குமாக்கும். கரித் துண்டு விழுந்து விட்டது.''

''சும்மா கதையெல்லாம் அளக்காதே. அம்மா வேணும், அப்பா வேணும்னு அழக் கிளம்பிட்டே...... தாலாட்டுப் பாடட்டுமா, மடியிலே போட்டுத் தட்டட்டுமா....''

''பேசாமல் இருங்கள். இந்தப் பெட்டியில் இருப்பவர்கள் கேட்டு விட்டுச் சிரிக்கப் போகிறார்கள்....''

''அது இங்கு நடக்காத காரியம். இருவர் பக்கா வங்காளிகள். இருவர் பக்கா ஆங்கிலேயர்கள். நால்வருக்கும் நம் செந்தமிழின் இனிமையோ நாம் பேசும் மென்மையோ தெரியாதம்மா தங்கமே! எனக்குத்தான் அவர்கள் எது பேசிக் கொண்டாலும் புரியும்.... சரி சுசீலா, இதோ பார்த்தியா, பாவம், யசோதை இந்தக் கூடை நிறைய நமக்கென்று நிறையப் பழங்களை அடைத்து வைத்திருக்கிறாள். நானும் நீயும் யார் நிறையச் சாப்பிடுகிறோம் எனப் போட்டி போடலாம் வருகிறாயா?'' என்று வம்புக்கிழுத்தான் தியாகு.

**(தொடரும்)**



**விசாலம் — ராம்மோஹன்**

ப்ருக்பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட் ஸ்தாபனத்தின் தலைவர் ஸ்ரீ G. V. K. மூர்த்தி அவர்களின் குமாரி சௌபாக்கியவதி விசாலத்துக்கும் சென்னை, அட்வகேட் ஸ்ரீ G. கோபாலஸ்வாமி அவர்களின் குமாரன் சிரஞ்சீவி G. ராம்மோஹன் B.E., I.R.S.E. (S. E. RLY.) அவர்களுக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

திருமணத்துக்கும், வரவேற்புக்கும் நகரப் பிரமுகர்களும், நீதிபதிகளும் வருகை தந்து சிறப்பித்தார்கள்.

வாழ்க மணமக்கள்



டாடா பின்லே தேயிலை ஸ்தாபன மானேஜர் ஸ்ரீ கே. ஆர். பாலன் அவர்கள் புதல்வி சௌ. சாரதாவுக்கும் சவுத் இந்தியா விஸ்கோஸ் தரத் தணிக்கையாளர் ஸ்ரீ டி. ஆர். நாகராஜனுக்கும் சமீபத்தில் வெகு சிறப்பாகச் சென்னையில் திருமணம் நடந்தேறியது.

## கலைவளர்க்கும் கோயில்கள்

# அண்ணாமலை சர்வகலாசாலை

கோஷ்டி கானம் என்றாலே அதன் ஒலிக்குத் தனி இன்பம்தான். தனிக் குரல்களின் குறைபாடுகள் தேய்ந்து மறைந்து பொதுவான ஒரு நிறைவுணர்ச்சியைத் தோன்றச் செய்யும் கட்டம். அந்த இனிமையை ரசித்தவாறு அண்ணாமலை சர்வகலாசாலையைச் சேர்ந்த சங்கீதக் கல்லூரிக்குள் நுழைந்தபோது அந்த இனிமையை விட ஒருபடி மேலான இனிமை ததும்பும் புன்னகையுடன் எங்களை வரவேற்றவர் சங்கீதக் கல்லூரியின் தலைவர் இசையரசு தண்டபாணி தேசிகர்தான். அவருடன் துணையாகப் பணியாற்றும் சங்கீத வித்வான்கள் டி. கே. ரங்காச்சாரியும் மைலம் வஜ்ரவேலு முதலியாரும் கூட வர, தேசிகர் அவர்கள் கல்லூரியைச் சுற்றிக் காட்டப் புறப்பட்டார்.

தமிழ் நாட்டில் இசைப் பயிற்சிக்கு என்று கல்லூரியாகத் தோன்றிய ஸ்தாபனம் இதுதான் முதலாவது என்று தோன்றுகிறது. கல்லூரியின் ஆரம்ப நாட்களில் இசைத் துறையில் மேதைகளாக விளங்கும் டைகர் வரதாச்சாரியார், சபேசய்யர், பொன்னையா ஆகியோர் இங்கு ஆசிரியர்களாகப் பணியாற்றியிருக்கிறார்கள். முதல் மாணவர்கள் குழுவின் மூலம் இசைத் துறைக்கு அறிமுக மாணவர்களில் டி. கே. ரங்காச்சாரி, கே. எஸ். நாராயணஸ்வாமி, சாத்தூர் சுப்ரமணியம் முதலியோரைக் குறிப்பிடலாம்.

பொதுவாக உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்தவர்கள்தான் இங்கு அநுமதிக்கப் படுகிறார்கள். விசேஷ யோக்கியதாம்சம் உடையவர்களிடம் இந்த விதி தளர்த்தப்படுகிறது. நான்கு ஆண்டுகள் படிப்புக்குப் பிறகு சங்கீத பூஷணப் பட்டம் அளிக்கிறார்கள்.

மாணவர்கள் சாதகம் செய்வதற்கென்று தனியாகவே வெளியே ஒரு ஹால் ஒதுக்கப்படுகிறது. சாத ஹாலிற்கும் (மெஸ்) இதற்கும் சம்பந்தம் இல்லை!

கல்லூரிக்குள்ளும் ஒரு வகுப்பிலிருந்து கிளம்பும் ஒலி மற்ற வகுப்பு மாணவ மாணவிகளின் கவனத்தைப் பாதிக்காத வகையில் இடையே கண்ணாடிக் கதவுகளை விசேஷ முறையில் அமைத்திருக்கிறார்கள்.

ஸ்ரீ தேசிகர் பழங்காலத்திலிருந்து நவீன காலம் வரை புழக்கத்தில் இருக்கும் பலவிதமான இசைக் கருவிகளை இங்கு நிறைய வாங்கிச் சேர்த்து வைத்திருக்கிறார். மகர யாழிலிருந்து மண்டோலின் வரை ஒருங்கே இங்கு பார்க்க முடிகிறது. வாரத்தில் மூன்று நாட்கள் மிருதங்க ஆசிரியரைக் கொண்டு 'தத்தகால' வகுப்புகள் நடத்துகிறார்கள். இந்த வகுப்புகள் மாணவர்களின் ஸ்வர ஞானம் அபிவிருத்தியடையப் பெரிதும் உதவுகின்றன.

திரு தேசிகரிடமும் அவருடைய சகாக்களிடமும் விடைபெற்று இசைக் கல்லூரியிலிருந்து இஞ்சினியரிங் கல்லூரியில் நுழைந்தோம். அநுபவமும் ஆற்றலும் மிகுந்த லெப்டினன்ட் கர்னல் பால் பொறியியல் துறைத் தலைவராக இருக்கிறார். வழக்கமான, மெக்கானிகல், எலெக்டிரிகல், சிவில் பிரிவுகளுடன் கெமிகல் இஞ்சினியரிங் பிரிவும் இங்கு இருக்கிறது. பொறியியல் துறை இந்தச் சர்வ கலாசாலையில் 1945ம் ஆண்டில் தொடங்கப்பட்டது. வெளிநாடுகளின் உதவி



திரு ராமானுஜாச்சாரி



திரு ராமநாதன்



திரு ரங்கசாமி

மூலம் கிடைத்த பல உயர்ந்த ரக சாதனங்களை இங்கு காண முடிகிறது. மோட்டார் காரின் இயந்திர மாதிரியை ஒரு சிறு பிளாஸ்டிக் மாடல் மூலம் இயக்கிக் காண்பித்தார்கள். வியப்பூட்டும் மாடல் அது.

விவசாயத் துறைத் தலைவர் டாக்டர் ரங்கசாமி கலைத் துறைத் தலைவராகப் பணியாற்றும் திரு எஸ். வி. ஆதி நாராயணன், விஞ்ஞானத் துறைத் தலைவரான டாக்டர் ரங்கசாமி ஐயர் ஆகியோரையும் சந்தித்து அவரவர்கள் துறையின் வளர்ச்சி பற்றி அளவளாவும் வாய்ப்புக் கிட்டியது.

திரு ஆதிநாராயணன் மனோதத்துவத் துறையில் ஒரு பேராசிரியர். கனமான விஷயங்களைப் பற்றி வெகு எளிதாகப் பேசுகிறார். ''மனோதத்துவ சாஸ்திரம் என்பது படித்தவர்களுக்கும் பட்டம் பெற்றவர்களுக்கும் மாத்திரம் உதவக் கூடியதல்ல. பாமர மக்களும் அதைப் புரிந்து கொண்டால் நல்ல பலனடைவார்கள். குறிப்பாக, கிராமவாசிகள் புதிதாக நகர வாழ்க்கையை மேற்கொள்ளும் போது புது வாழ்க்கையைச் சீராக அமைத்துக்கொள்ள மனோதத்துவ சாஸ்திரம் வெகுவாக உதவும்'' என்றார்.

டாக்டர் ரங்கசாமி ஐயர் அதிகமாகப் பேசுவதில்லை. ஆனால் பேசும் வார்த்தைகளைப் 'பட்பட்' என்று அழுத்தமாகவே பேசுகிறார். புள்ளி விவர இயல், ரசாயனம், பௌதிகம் முதலிய பாடங்களில் உயர் பட்டம் பெற்ற

பல அண்ணாமலை சர்வ கலாசாலை மாணவர்கள் இன்று ஜவுளி உற்பத்தித்துறை முதல் அணு சக்தி நிறுவனம் வரை பல துறைகளில் பணியாற்றுவது பற்றிப் பெருமைப்படுகிறார். கடல் வாழ் உயிரினங்கள்பற்றிய அவர்களது போர்ட்டோநோவோ ஆராய்ச்சி நிலையத்தின் பணிகளைப் பற்றி உற்சாகத்துடன் விவரித்தார்.



திரு தண்டபாணி தேசிகர்

மொழி இன ஆராய்ச்சிப் பகுதித் தலைவராகத் திரு லெ. ப. கரு ராமநாதன் செட்டியாரும், பொதுக் கல்வி, வேதாந்தத் துறைத் தலைவராகப் பணியாற்றும் ராமானுஜாச்சாரியாரும் அவரவர்கள் துறையில் விற்பன்னர்கள்.

ஆசிரியர்கள் அனைவருக்கும் சுற்று வட்டாரத்தில் ஜாகை வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

சர்வ கலாசாலைக்கென்று ஒரு தனிப் பிரசுர இலாகா இயங்குகிறது. அதில் நிர்வாகப் பணியாற்றும் திரு ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை முன்னாட்களில் பல தெய்வ ஸ்தலங்களில் அற நிலைய மேற்பார்வையாளராகப் பணியாற்றி அனுபவம் பெற்றவர். வயதில் முதிர்ந்திருந்தாலும் உற்சாகத்திலும் உணர்ச்சியிலும் இளமை குன்றாத திரு பிள்ளை அவர்களுடன் பேச ஆரம்பித்தால் நம்மைக் கபாலீசுவரர் கோயிலுக்குள் கூட்டிப் போய் அங்கிருந்து நேரே கன்யாகுமரி வரை அழைத்து வந்து விடுகிறார். உடலுக்கு எந்த வித அலுப்புமில்லை. உள்ளத்துக்கு எத்தனையோ புது விஷயங்கள் வரலாறுகள் லாபம்.

பொறியியல் கல்லூரியில் பயிற்சியுறும் மாணவர்கள்







திரு ஆதிநாராயணன்

அண்ணாமலை சர்வ கலாசாலை ஒரு தனி உலகமாகத் திகழ்கிறது என்று சொன்னால் மிகையாகாது. ஒவ்வொரு விஷயத்தையும் திட்டமிட்டுச் செய்து வருவதால், குளக்கரைத் தென்னை மரங்களிலிருந்து குறுக்கே போகும் ரஸ்தா வரை எல்லாம் ஒருவித அழகுடன் விளங்குகின்றன.

அண்ணாமலை பல்கலைக் கழகம் நாட்டின் அறிவு வளர்ச்சிக்கு உரமாக அமைந்துள்ள ஒரு நல்ல கலைப் பண்ணை. அரசியல் துறையிலும் அறிவுத் துறையிலும் பல பிரமுகர்களை உருவாக்கி அளித்திருக்கும் பெருமையை அடைந்திருக்கிறது. கல்வித் துறையில் மாணவர்கள் சமூகத்தின் தரத்தை உயர்த்த அது பாடுபடுகிறது.

ஃ ஃ ஃ

வாசக நேயர்களிடமிருந்து தற்காலிகமாக விடை பெறுகிறோம். கல்லூரி மாணவர்கள் முழு வேகமாகத் தங்கள் இறுதி ஆண்டுப் பரீட்சைகளுக்குப் படிக்கும் நேரம் இது! அதைத் தொடர்ந்து விடுமுறை நாட்கள். இந்தச் சூழ்நிலையில் அவர்களைச் சந்திப்பதைக் கொஞ்ச காலம் ஒத்திப் போடுவது நல்லதல்லவா?

ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் நூலகம்



# அறிவுக்கனலே, அருட் புனலே!

ரா. கணபதி **60**

அயர்ந்து அயர்ந்திருந்த ஸ்வாமிஜியை அன்போடு உள்ளே அழைத்தாள் அந்தப் பெண்மணி. இருவரும் அறிமுகம் செய்து கொண்டார்கள். அந்தப் பெண்மணி ஜார்ஜ் டபிள்யூ ஹேல் என்ற தனிகரின் மனைவியாம்! ஜார்ஜ் ஹேலுக்கும் ஸ்ரீமதி ஹேலுக்கும் சிகாகோவில் நிரம்பச் செல்வாக்கு உண்டாம். எனவே ஸ்வாமிஜியை சர்வமத மகாசபையில் பிரதிநிதியாக அனுமதிக்கச் செய்யத் தான் முயல்வதாகக் கூறினாள் ஹேல்.

"முதலில் சிற்றுண்டி ஆகட்டும்; அப்புறம் நானே உங்களைச் சர்வமத மகாசபை அலுவலகத்துக்கு அழைத்துச் செல்கிறேன்" என்றாள்.



ஸ்ரீமதி ஹேலுக்கு மட்டுமின்றி, அவளைத் தம்மிடம் கூட்டுவித்த இறைவனுக்குமாகச் சேர்த்து நன்றி தெரிவித்தார் ஸ்வாமி விவேகானந்தர்.

ஸ்வாமிஜியை சர்வ மத சபையின் தலைவரான டாக்டர் ஜே. ஹெச். பார்ரோஸ்ஸிடமே கூட்டிச் சென்றாள் ஸ்ரீமதி ஹேல். ஏற்கனவே பேராசிரியர் ரைட் வேறு ஸ்வாமிஜியைப் பற்றி மகாசபை முக்கியஸ்தர்களுக்கு எழுதியிருந்தார். எனவே ஸ்வாமி விவேகானந்தர் சர்வமத மகாசபைக்கு ஒரு பிரதிநிதியாக அனுமதிக்கப்பட்டார்.

அவதாரத்தை நிகழ்த்துவித்த அன்னை அவதாரப் பணியைப் பலிதமாக்காது போவாளா? எந்தக் காரியத்துக்காக ஸ்வாமிஜி அமெரிக்கா வந்தாரோ அந்தக் காரியத்தின் பூர்வாங்கம் செம்மையாக நிறைவேறிவிட்டது. நிறைவேறாமல் போகுமா?

ஸ்வாமிஜியின் உடம்பில் குதுகுதுப்பு ஏறத் தொடங்கியது. முப்பது பிராயத்து இளைஞரான அவரும் நரைப்புத் தட்டிய உலகத்துப் பேரறிஞர்கள் கூடிய சர்வ மத சபையில் பேசப் போகிறார்! பரீட்சையில் தேற வேண்டுமே எனப் பரமனையும் பரம குருவையும் பிரார்த்தித்தபடி அவர்கள் வசமே தம்மை ஆத்ம நிவேதனம் செய்து கொண்டார்.

உலக சரித்திரத்தில், முக்கியமாக உலகத்துச் சமயங்களின் சரித்திரத்தில், குறிப்பாக இந்து சமய சரித்திரத்தில் பொன்னெழுத்தால் பொறிக்க வேண்டிய பெருவிழா 1893 ஆண்டு செப்டம்பர் மாதம் சிகாகோவில் நடைபெற்ற சர்வ மத சபை.

கிறிஸ்டஃபர் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்து நானூறு ஆண்டுகள் பூர்த்தியானதையொட்டி 1893 ம் ஆண்டு சிகாகோவில் ஒரு விழாக் கொண்டாடப்பட்டது. இந்த விழாவின் ஒரு பகுதியாகவும், உலகக் கண்காட்சியின் ஓர் அம்சமாகவுமே சர்வ மத சபை கூட்டப்பட்டது.

பிற்காலத்தில் ஸ்வாமி விவேகானந்தரிடம் சர்வ மத சபையை யார் நடத்தியது என்று கேட்டபோது அவர் சிரித்தபடியே "யார் என்ன? அம்பாள்தான் நடத்தி வைத்தாள். அமர சமயமாகிய இந்துத் தத்துவத்தை உலகுக்கெல்லாம் நான் எடுத்துச் சொல்ல வேண்டுமென்றே சர்வேசுவரியானவள் சர்வ மத மகாசபையை நடத்தினாள்" என்று கூறினார்.

உலகத்தின் பற்பல நாடுகளிலிருந்து கத்தோலிக்கர், பிராடெஸ்டெண்ட், கிரீக் சர்ச் ஆகியோர் உள்ளிட்ட கிறிஸ்துவப் பிரதிநிதிகளும், இந்து மதம், ஜைன மதம், பௌத்தம், ஜூடாஸ் மதம், கன்பூஷியஸ்மதம், ஷிண்டோ மதம், இஸ்லாம், மஜ்டா மதம், ஆகிய எட்டு சமயங்களின் பிரதிநிதிகளும் மகா சபையில் கலந்து கொள்ள வந்திருந்தனர்.

கலை நிலையம் (Art Institute) என்ற பெயருக்கு முற்றிலும் தகுதி வாய்ந்த கட்டடத்தில் கொலம்பஸ் ஹால் என்ற மாபெரும் மன்றத்தில் 1893ம் ஆண்டு செப்டம்பர் 11ந் தேதி காலை பத்து மணிக்கு 'டாண் டாண்' என்று மணி முழங்கியது.

ஏழாயிரம் மக்கள் அப்பெரிய மன்றத்தில் ஆர்வத்துடன் கூடியிருக்க, சமயப் பிரதிநிதிகள் யாவரும் மகத்தானதோர் அணியாக வகுத்து மேடை மீது ஏறினர். வெவ்வேறு வண்ணமுள்ள பற்பல தலையணிகளுடனும், பிறைமதி, சிலுவை போன்ற பற்பல சின்னங்களுடன், முடி வளர்த்தவரும், முண்டனம் செய்தவருமாக அந்தப் பிரதிநிதிகள் வரிசையாக வந்ததே ஒரு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. சாரும் உலகத்துக்குச் சாகாத நிலையைச் சொல்பவர்கள் அல்லவா அவர்கள்?

இந்தியாவிலிருந்து பல பிரதிநிதிகள் மகாசபைக்கு வந்திருந்தனர். கல்கத்தாவிலிருந்து பிரதாப் சந்திர மஜூம்தாரும், பம்பாயிலிருந்து நகர்கரும் பிரம்ம சமாஜப் பிரதிநிதிகளாக வந்திருந்தனர். காந்தி என்ற ஒருவர் ஜைனர்களின் பிரதிநிதியாக வந்திருந்தார். மேல் நாட்டில் தப்பிப் பிறந்து, இந்தியருக்கே இந்திய மகிமையை விளங்க வைத்த பெருமாட்டி அன்னிபெஸண்ட் அம்மையாரும், சக்கரவர்த்தியும் தியாஸாபிகல் சொஸைட்டியின் பிரதிநிதிகளாக வந்திருந்தனர். தர்மபாலர் என்பவர் புத்த மதப் பிரதிநிதியாக வந்திருந்தார். இதில் வேடிக்கை என்னவென்றால் ஸ்வாமி விவேகாநந்தரைத் தவிர ஹிந்துமதத்தின் பிரதிநிதி என்ற பெயரில் யாருமே வரவில்லை. வேடிக்கையல்ல இது; வேதனை தருகிற விஷயமே ஆகும். சநாதனமான, புராதனமான ஹிந்து தர்மத்துக்கெனவே ஒரு பிரதிநிதியை மகாசபைக்கு அனுப்பி வைக்கக்கூட அன்றைய இந்தியா அறிந்திருக்க வில்லை.

மேடையில் முப்பத்தொன்றாவதாக ஸ்வாமிஜி அமர்ந்திருந்தார். ஆனால் காய்கறிகளிடையே திகழும் ஒரு புஷ்பம் போல அவரே மற்றவர்களிடையில் எடுப்பாகத் துலங்கினார். நூற்றி எழுபது ராத்தல் எடையுள்ள மலை போன்ற திருமேனியில் ஆயிரமாயிரம் ராத்தல் எடையுள்ள ஞானத்தைத் தாங்கி யிருப்பது போல அமர்ந்திருந்த ஸ்வாமிஜி அவையோரை எளிதில் கவர்ந்து விட்டார். பொன்னிறத் தலைப்பாகையும் சிவந்த நீண்ட அங்கியும் காஷாய இடைப்பட்டையுமாக வீற்றிருந்த ஸ்வாமிஜி அக்கினியில் அபிஷேகம் செய்த அருள் வடிவாகப் பொலிந்தார்.

''என் இதயம் தத்தளித்துக் கொண்டிருந்தது. நாவு வறண்டே போய் விட்டது. நரம்புத் தளர்ச்சி காரணமாகக் காலைக் கூட்டத்தில் பேசும் துணிவு எனக்கு இல்லை'' என்று ஸ்வாமிஜி ஒரு கடிதத்தில் எழுதுகிறார். ''மஜூம்தார் நன்றாகப் பேசினார்; சக்ரவர்த்தி ரொம்ப நன்றாகப் பேசினார். அவர்களெல்லாரும் பேச்சுக்களைத் தயாரித்துக் கொண்டு ஆயத்தமாக வந்திருந்தார்கள். நான்தான் முட்டாள்.......'' என்று சொல்லிக்கொண்டு போகிறார். அந்த 'முட்டாள்தனம்' எந்த அறிஞருக்குத்தான் கிடைக்கும்?

மீண்டும் மீண்டும் அக்ராஸனர் கூப்பிட்ட பின் மனசைக் கெட்டிப்படுத்திக் கொண்டு ஸ்வாமிஜி பேச எழுந்திருந்தார். எதைப் பேசுவது, எதை எண்ணுவது என்றே புரியாத நிலையில் அவரது உள்ளம் தன்னை அறியாமல் ஸர்வேசுவரியை நாடிச் சென்றது. அறிவுப் பொய்கையாம் ஞான சரஸில் விளங்கும் சரஸ்வதியாக, நவரஸங்களுடன் கூடிய கலையின் ஸ்வரூபமாகிய சரஸ்வதியாக அம்பிகையை உள்ளம் குவிந்து நினைந்தார். காத்தது கருணைத் தெய்வம்! எள்ளத்தனைப் பொழுதும் மறவாது நினைந்தவரின் நாவில் வெள்ளமெனப் பொழிந்துவிட்டாள் தேவி.

வெகு சமீப காலத்தில் பிறந்த அமெரிக்க நாகரிகத்தை நோக்கி, கல்ப கல்பாந்தரங்களாக உயிர் வாழ்ந்து வந்துள்ள வேதாந்த சமயம் பேசத் தொடங்கிற்று.

விவேகாநந்தர் பேசத் தொடங்கினார்:

''அமெரிக்க சகோதரிகாள், சகோதரர்காள்!''

அந்த வார்த்தைகள் விவேகாநந்தரின் வாயிலிருந்து மட்டும் உதிரவில்லை. அவரது உதிரத்தில் ஊறியிருந்த உண்மையான சகோதரத்துவமே சொல்லாக வந்தது.

ஞானக்கனி ஒளி வீசும் திருமுகமும், செந்தழலையே ஆடையாகப் பூண்டது போன்ற காஷாயக் கோலமுமாக நின்றவரிடமிருந்து பனியின் தண்மைவாய்ந்த அன்பு எண்ணம் சந்தனத்தின் குளுமை கூடிய வார்த்தைகளாக வந்த அந்தக்கணமே கூடியிருந்தோரின் இதயங்கள் அவரிடம் வசியமாகி விட்டன. ஒரே வாக்கியத்தாலேயே உலகைத் தம்மிடம் புரட்டிக் கொண்டு விட்டார் ஸ்வாமிஜி.

இதுகாறும் பேசிய பிரதிநிதிகள் யாவரும் சபையினருக்கு ஆசிரியர்களாகத் தங்களைக் கருதி உயர் பீடத்திலிருந்து பேசுவது போல அவர்களை விளித்தார்கள். அல்லது 'கனவான்களே, சீமாட்டிகளே' என்று அழைத்தனர். ஸ்வாமிஜிதான் அவர்களுடன் ரத்தக்கலப்பு உள்ளவராக அழைத்தார். வெறும் மேடைப் பிரசங்கமாக இன்றி இதயபூர்வமாக அனுபவித்து அழைத்தார். அந்த இதய சக்திதான், இதய சுத்திதான் அவையை அப்படியே ஆட்கொண்டு விட்டது.

கூட்டத்தினர் வெறி பிடித்தாற்போல் கரகோஷம் செய்தனர். சிலர் ஆவேசமாகத் தங்கள் இடத்திலிருந்து எழுந்து, 'வாழ்க' கோஷம் போட்டார்கள். ஸ்வாமிஜியால் அடுத்த நூறு செகண்டுகளுக்கு மேல் பேச்சைத் தொடங்கவே முடியவில்லை. கல் விழுந்த தடாகம் போல அவரது ஒரு வார்த்தை அத்தகைய கொந்தளிப்பை ஏற்படுத்தி விட்டது.

ஒருவாறு சபை அடங்கியவுடன் ஸ்வாமிஜி பேசலானார்:

''பிரபஞ்சத்திலேயே மிக மிகத்தொன்மை வாய்ந்த சாது சங்கத்தின் சார்பில் உங்களுக்கு நன்றி கூறுகிறேன்; எல்லா மதங்களுக்கும் அன்னையான மதத்தின் சார்பில் உங்களுக்கு நன்றி கூறுகிறேன்; எல்லா வகுப்புக்களையும் பிரிவுகளையும் சேர்ந்த கோடானு கோடி ஹிந்துக்களின் சார்பில் உங்களுக்கு நன்றி தெரிவிக்கிறேன்.''

'அடர்ந்த இந்தியா'வாகவே பேசினார் ஸ்வாமி விவேகாநந்தர்.

''சகிப்புத் தன்மையையும், உண்மைகளை உலகம் முழுவதும் அங்கீகரிக்க வேண்டும் என்பதையும் பாருக்கெல்லாம் உபதேசிக்கும் ஒரு

மதத்தைச் சேர்ந்தவன் நான் என்பதில் பெருமிதம் கொள்கிறேன். எல்லா மதங்களும், எல்லாத் தேசங்களும் பகிஷ்கரித்த அகதிகளுக்கெல்லாம் நிழல் தந்த நாட்டைச் சேர்ந்தவன் என்பதில் நான் பெருமை கொள்கிறேன்.....

"சகோதரர்காள்! என்னுடைய பாலப் பருவத்திலிருந்து நான் மனனம் செய்து நினைவில் வைத்துள்ள ஒரு சுலோகத்திலிருந்து... சில வரிகளை உங்களுக்கு மேற்கோள் காட்டுகிறேன். 'பலவேறு நதிகள், பலவேறு இடங்களில் உற்பவித்தாலும் ஒரே கடலில் கலப்பது போலவே, பலவிதமான மனப் போக்குள்ளவர்கள் பின்பற்றும் பலப்பல மார்க்கங்களும்—அவை நேராக இருப்பினும் சரி, கோணலாயிருப்பினும் சரி — உன் ஒருவனிடம்தான் இட்டுச் செல்கின்றன.' ❁

"இப்போது நடக்கும் இந்தச் சம்மேளனம் கீதையில் போதிக்கப்படும் மிக்க உயர்ந்த அற்புத சித்தாந்தத்தின் நிரூபணமேயாகும்: 'எந்த உருவில் என்னை ஒருவன் நாடினாலும் அவனை நான் சென்றடைகிறேன். இறுதியில் என் ஒருவனிடமே கொண்டு விடும் பாதைகளைத் தான் எல்லா மக்களும் பின்பற்றிக் கொண்டிருக்கிறார்கள். பிரிவு மனப்பான்மை, குறுகிய நோக்கம், அதன் வழித்தோன்றும் சுயமதவெறி இவை இந்த எழிலார்ந்த உலகை நீண்ட நாட்களாகப் பீடித்து விட்டன; அதனைக் கொடுமையால் நிரப்பி விட்டன; மக்களின் இரத்தத்தால் நனைத்து விட்டன; நாகரிகங்களை அழித்து விட்டன; தேசங்களைப் பூரணமாகத் துர்த் தசையில் ஆழ்த்தி விட்டன. இந்தப் பயங்கர பூதங்கள் இருந்திராவிடில், இப்போது இருப்பதைவிட மனித சமுதாயம் மிக மிக முன்னேறியிருக்கும். இன்று அந்தப் பூதங்களின் அழிவுக் காலம் வந்து விட்டது. இந்தச் சம்மேளனத்தின் பெருமையைத் தெரிவித்து இன்று காலையில் முழங்கிய மணி மத வெறிக்கும், போர் வாளாலும் பேனாவாலும் செய்கிற மதச் சண்டைகளுக்கும்...சாவு மணியாக இருக்குமென்று ஆர்வமுற நம்புகிறேன்."

சிறிய உரைதான் அது! ஆனால் அந்தச் சிறிய உரையே சுனை கால மின்னலைப்போல் கேட்போரின் உள்ளத்தில் சுடர்க்கொடி பரப்பி விட்டது.

சமய சமரஸம் என்ற மகத்தான பொருள் பற்றி ஸ்வாமிஜி கூறி விட்டார். எல்லா மதங்களும் இறைவனிடம் அழைத்துச் செல்பவை எனக் கூறி விட்டார். தக்ஷிணேசுவரத்துத் தவமுனிவர் பரமஹம்ஸ ராமகிருஷ்ண பகவான் எந்த சத்தியத்தை நிலைநாட்ட அவதரித்தாரோ, அந்தச் சத்தியமாகிய சர்வமத சமரஸத்தை உலக அரங்கில் எடுத்தோதிவிட்டார் ஸ்வாமிஜி.

பாரத மதத்தின் பெருமையே இந்தச் சமரஸ உணர்வுதான். வேதமும், வேதாந்தமும் பகவத் கீதையும் எங்கள் மதம் ஒன்றுதான் வழி என்று கூறாமல், உலகமெங்கிலும் இருக்கக் கூடிய ஆத்ம உபாயங்களை யெல்லாம் ஒப்புக் கொண்டுள்ளன. இதையே ஆழ்வாரும்,

'வணங்கும் துறைகள் பலபல ஆக்கி
மதி விகற்பால்
பிணங்கும் சமயம் பல பல ஆக்கி
அவை அவை தோ(று)
அணங்கும் பலபல ஆக்கி நின்மூர்த்தி
பரப்பி வைத்தாய்'

என்று அழகுறப் பாடிவிட்டார். அந்தச் சமய உணர்வை தக்ஷிணேசுவரத்தில் தவ முனிவர் வளர்த்து வந்த அதே சமயத்தில் தமிழகத்தின் ஞான - பக்த - கவியாகிய வள்ளலார் இராமலிங்க அடிகளும் அதே சமரஸ சன்மார்க்க நெறியைப் பரப்பி வந்தார். 'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்' என்ற திரு

❁ சிவமஹிம்ன ஸ்தோத்திரம்—7ம் சுலோகம்

## காலரா - காபரா

1883ல் முதன் முதலாகக் காலராக் கிருமிகளை ராபர்ட் காச் என்ற விஞ்ஞானிக்குக் காட்டிக் கொடுத்த தனிப்பெருமை நம் பாரத நாட்டைச் சேர்ந்தது. ஆனால் அவர் கண்ட முடிவைக் காலத்தில் உலகம் ஒப்புக் கொள்ள வில்லை. ராபர்ட் கண்டுபிடித்த கிருமிகளை ஒரு ஜெர்மானியர் உட்கொண்டு, 'அவை என்னை ஒன்றும் செய்து விடவில்லை, பாருங்கள்!' என்று மார் தட்டினார்! இதற்குப் பல வருஷங்கள் முன்னதாகவே 1869லேயே ஹாப்கின்ஸ், கன்னிங்ஹாம் வான்டைக் மக்னமாரா போன்ற மேதைகள், பாலைக்கால், மலேரியா, காலரா, பாம்பு விஷம் போன்ற துறைகளில் ஆராய்ச்சிகள் நடத்தி வந்தனர். இவர்களுடைய அரிய சாதனைகள் அளித்த ஊக்கத்தின் பயனாகத்தான் பாரத அரசாங்கத்துக்கு ஒரு வியாதிகள் ஆராய்ச்சி நிலையத்தையே ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. வங்காளத்தில் காலராவும் பம்பாயில் பிளேக்கும் கொடுக்கும் தொல்லையை இனாகுலேஷன் மூலம் நீக்க முடியுமா என்று ஆராயுமாறு ஹாப்கின் கேட்டுக் கொள்ளப்பட்டார். 1899ல் பிளேக் ஆராய்ச்சி நிலையம் பம்பாயில் ஆரம்பிக்கப்பட்டது. பின்னால் அதன் ஸ்தாபகர் ஹாப்கினின் பெயரையே தாங்கி, பல வித நோய்களின் ஒழிப்புக்குச் சிறந்த சேவை செய்து வரும் இந்நிலையம் ஸல்பா மருந்துகளையும் உற்பத்தி செய்கிறது. ❁❁❁





மந்திரத்தின் விளக்கமாக வடலூரில் சத்திய ஞான சபையை நிறுவினர். 'பரம்பொருளே ஜீவனும்; எனவே மக்கள் பணி தெய்வப் பணியே' என்று பரமஹம்ஸர் போதித்த அதே சமயத்தில் அருட்பெருஞ் சோதியாகிய நம் தமிழ்ப் பெரியார் 'ஜீவகாருண்யமே புண்ணியம் என்பது; ஜீவகாருண்யமின்மையே பாபம்' என உபதேசித்து வந்தார். ஏறத்தாழ ஒரே காலத்தில் இப்படி இரு மகனீயர்கள் அவதரித்து ஒரே வழியைக் கூறியது அற்புதமல்லவா? சர்வ மத மகாசபையில் சர்வ மத சமரஸம் என்ற தத்துவம் எடுத்துரைக்கப்பட்டபோது, இவ்விரு சான்றோர்களையுமே எண்ணி வணங்குவோமாக!

எல்லா மதங்களும் ஒன்றிலேயே முடிகின்றன என்று கூறிய ஸ்வாமிஜி, அந்த முடிவு—அல்லது நிறைவு—தான் வேதாந்தம் என்று நிலைநாட்ட வேண்டியிருந்தது. இதர மதங்களைப் போல் ஹிந்து மதத்துக்கு மட்டும் உரித்தான தெய்வங்களும், புராண இதிஹாஸங்களும் இருந்தாலும், இவற்றுக்கும் மேலாக உலகெல்லாம் ஒப்பக் கூடிய வேதாந்தமும் பாரத தர்மத்தில் உள்ளது என்று அவர் எடுத்துக் காட்ட வேண்டியிருந்தது.

எல்லா மதங்களும் ஒன்றிலேயே முடிகின்றன என்பது போல எல்லா ஜீவர்களும் ஒன்றிலேயே தோன்றி அந்த ஒன்றாகவே ஆகிறவர்கள் என்ற ஞானத்தைக் கூறும் வேதாந்தத்தை உலகில் நிலவச் செய்யும் பணியும் அவருக்கு இருந்தது. 'நான் பரம்பொருள்; எல்லா மக்களும் பரம்பொருள்; எனவே எல்லா மக்களும் நானே. ஆகையால் மக்கள் பணியே ஆத்ம மோட்சம்' என்பதாக அத்வைத சித்தாந்தத்துக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் தந்திருந்த புது சூத்திரத்தைப் பரப்பி, செயலாக்குகிற பொறுப்பும் ஸ்வாமிஜிக்கு இருந்தது.

இவற்றுக்கெல்லாம் துவஜா ரோஹணமே 1893ம் ஆண்டு செப்டம்பர் 11ந் தேதி அவர் சிகாகோவில் நிகழ்த்திய சிறு பிரசங்கம். துவஜம் தட்டுத் தடங்கலின்றிக் கொடி மரத்தில் ஏறி விட்டது. அமெரிக்கக் குடி மக்களின் மனத்தில் ஏறிவிட்டது.

ஸ்வாமிஜி தமது சிற்றுரையை முடித்தவுடன் அவரின் சத்திய உணர்விலும் அந்த உரையின் பொருளில் உறைந்திருந்த ஏழாயிரம் மக்களின் பதினாலாயிரம் கரங்களும் மகிழ்ச்சி கோஷம் செய்தன. ஸ்வாமிஜியோ உணர்ச்சி எழுச்சியில் தமது சக்தி முழுவதும் உறிஞ்சப் பெற்று, அயர்ந்து அமர்ந்தார்.

செப்டம்பர் 19ந் தேதியன்று சர்வமத மகாசபையில் ஸ்வாமிஜி நிகழ்த்திய 'ஹிந்து மதம்' என்ற பிரசங்கம் ஹிந்து மதத்தின் சகல அம்சங்களையும் சாரமாகப் பிழிந்து தந்த அற்புத உரையாகும்.

விதியைப் பற்றியும், வழிபாட்டைப் பற்றியும், வழிபாட்டு முறை யாவற்றையும் இசைத்துத் தரும் வேதாந்தத்தைப் பற்றியும், ஆத்மாவைப் பற்றியும் ஸ்வாமிஜி பேசினர். ஆத்மா நித்திய சுத்தமானது, எப்போதும் விடுதலை பெற்றது என்ற அமிருத தத்துவத்தை அமெரிக்கர்களுக்கு அளித்தார். ஜீவனும் பரம்பொருளும் ஒன்றே என்ற மகாவாக்கிய உபதேசத்தைக் குடகோளார்த்தத்தில் முழங்கினர்.

தானும் பரம்பொருளும் ஒன்றே, அதே போல் எல்லா ஜீவர்களும் பரம்பொருளே என்று உணர்ந்த ஒருவன் எப்படி எல்லா ஜீவர்களையும் தானாகக் கருதுவான் என்பதையும் ஸ்வாமிஜி எடுத்துக் கூறினர்.

அத்வைதம் எந்தத் தனியொரு நாட்டினருக்கும், ஜாதியினருக்கும், மதத்தினருக்கும் மட்டும் உரியதல்ல என்ற பேருண்மையை அறிவிக்கு முகமாக அமெரிக்கர்களை, ''அமர ஆனந்தத்தின் வாரிசுகளே!'' என்று விளித்து விவேகானந்த ஸ்வாமி கூறுவார்:

''கேளுங்கள், ஹிந்து உங்களை 'பாபி' என்று சொல்ல மறுக்கிறான். நீங்கள் ஆண்டவனின் குழந்தைகள், சாசுவத சுகத்தின் பங்குதாரர்கள், புனிதம் நிறைந்த பூரணப் பொருள்கள். தரணியிலுள்ள தெய்விகங்களாகிய உங்களையா 'பாபி' என்பது? மனிதனைப் பாபி என்பதுதான் பாபம். சிங்கங்காள், எழுந்து வாருங்கள். நீங்களெல்லாம் ஆட்டுமந்தை என்ற மயக்கை உதறிச் சிங்கங்களாகுங்கள். ஜடப்பொருள் உங்களின் அடிமை, பணியாள்; நீங்கள் அதன் பணியாள் அல்ல...... இப்படித்தான் வேதங்கள் கோஷிக்கின்றன'' என்றார், விஞ்ஞான சக்தி


mafatlal
GROUP

மிறுல் கூடப் பொருளுக்குக் கட்டுப்பட்டுக் கிடந்த மேல் நாட்டினரை நோக்கி.

எந்த மதத்தினரும் ஏற்கக் கூடிய உருவற்ற பொருளைச் சொல்வதோடு ஹிந்து மதம் நிற்கவில்லையே! உருவு படைத்த பல தெய்வங்களைக் கொள்ளும் மதமல்லவா அது? 'இத்தனை சாமிகளாமே! சாமிகளுக்குள் உறவாமே, சண்டையாமே' என்றுதான் மேல் நாட்டினர் — முக்கியமாக இந்தியாவில் மத மாற்றம் செய்துவந்த கிறிஸ்துவ மிஷனரிகள்- கேலி செய்தனர். பல தெய்வம் கொள்வதன் உட்பொருளையும் ஸ்வாமிஜி நிரம்பட விளக்கலானார். மனோதத்துவத்தின்படி பார்க்கும் போது உருப் படைத்த தெய்வம் மனிதனின் சமயத் தேவைகளில் ஒன்றாகும் என்றும், தத்துவத்தைப் புரிந்து கொள்ள உதவும் சின்னங்களே பற்பல தெய்வங்கள் என்றும், உணர்வினை இறுக்கி ஒன்றில் பதித்து ஒருமுகப் படுத்த உருவ வழிபாடு உதவிபுரிகிறது என்றும், சடங்குகள் யாவும் உள்ளத் தூய்மையை அளிக்கச் சாதனமாகும் என்றும் தெளிவுபடுத்தினார் ஸ்வாமிஜி. சின்னம் இல்லாமல் வழிபடுபவர் எம்மதத்திலும் இல்லை என்பதை எல்லா மதத்தினரும் கூடிய அவையில் தைரியமாகக் கூறினார் ஸ்வாமிஜி.

'சின்னங்களைக் கடந்த நிலையிலுள்ள ஹிந்து ஞானவான் அவற்றைப் பரிகாசம் புரிவதில்லை; ஏனெனில், அந்த நிலையிலிருந்துதான் அவனும் தத்துவத்தின் உயர் நிலைக்குச் சென்றான்; குழந்தையாயிருப்பது பாபம் என்று வயோதிகன் சொல்ல மாட்டான் அல்லவா?' என்று ஆணித்தரமாகக் கேட்டார். அதைத் தொடர்ந்து உலகெல்லாம் இன்று சுடர் வீசும் இந்த ஒப்பற்ற வாசகத்தைக் கூறினார்: "மனிதன் தவற்றிலிருந்து உண்மைக்குச் செல்கிறான் என்று ஹிந்து கருதுவதில்லை; ஓர் உண்மையிலிருந்து இன்னோர் உண்மைக்குச் செல்கிறான்; கீழ்ப்பட்ட உண்மையிலிருந்து மேம்பட்ட உண்மைக்குச் செல்கிறான் என்பதே ஹிந்துவின் கொள்கை."

இறுதியில் எல்லா மதங்களின் லட்சியமும் துன்ப உலகிலிருந்து இன்ப நிலைக்கு மீட்பது என்ற ஒன்றேதான் என்று கூறிய ஸ்வாமிஜி, சகல சமய அனுஷ்டானங்களைச் சேர்ந்தவர்களும் அப்பியசிக்கக் கூடிய உலக மதம் உருவாக வேண்டும் எனக் கூறினார். 'ஸர்வதர்ம ஸ்வரூபி' — எல்லாச் சமயங்களும் உருவாகச் சமைந்தவர் என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றிய சுலோகம் கூறும். அவருடைய ஞான புத்திரர் தந்தையின் சொத்தை உலகத்திலுள்ள தமது கோடானு கோடி சகோதரர்களுக்கும் வழங்கி விட்டார்.

விவேகாநந்தரது ஆத்ம விஸ்தாரம், அவரது அநுபவத்தின் விரிவு, அவரது மனோ பாவத்தின் வியத்தகு தயாளம், அவரது சரளமும் நளினமும் கூடிய ஆங்கில வாக்கு இவை அமெரிக்க மக்களை ஆட்கொண்டு விட்டது. 'கிடி' என்ற செல்லச் சிஷ்யரைப் பற்றி 'அவர் வந்தார், பார்த்தார், வெல்லப்பட்டார்' என்று ஸீஸரின் பாணியில் கூறிய ஸ்வாமிஜி அமெரிக்காவுக்கு வந்தார், பேசினார், ஆயிரமாயிரம் உள்ளங்களை வென்றுவிட்டார்!

வங்காளத்திலே தத்தர் குடியில் செல்வ மகனாகப் பிறந்து, தக்ஷிணேசுவரத் தபஸ்வியிடம் வளர்ந்து, நாடெங்கிலும் ஆண்டியாக அலைந்து பக்குவப்பட்டவர் இப்போது பேரலை ஒன்று மோதி உருட்டித் தள்ளியதிலே லோக குரு பீடத்தில் ஆரோகணித்து விட்டார்!

அமெரிக்கா அவரை ஆசாரியனாக ஏற்றவும் போற்றவும் தொடங்கி விட்டது!

பாரதம் ஓர் அநாகரிக நாடு; பாரத மதம் ஓர் அநாகரிக மதம் என்றெண்ணி மிஷனரிகளை அனுப்பி வைத்த கிறிஸ்துவ உலகத்தின் கண்களைத் திறந்து வைத்தார் ஸ்வாமிஜி. பாரதத்துக்குக் கற்பிக்கத் தங்களிடம் ஏதுமில்லை; மாறாக அதனிடமிருந்து தாங்கள் கற்க வேண்டியது ஏராளம் என்று பலர் புரிந்து கொள்ளத் தலைப்பட்டார்கள். அதாவது ராமகிருஷ்ண — விவேகாநந்தரின் அவதார நோக்கம் நிறைவேறத் தொடங்கி விட்டது.

சநாதன தர்மத்தைப் பாரதத்தில் நிலை நாட்டவே இதுவரை எல்லா அவதாரங்களும் நிகழ்ந்தன. ஸ்வாமிஜியோ இந்தியாவில் சநாதன தர்மத்தைப் பிறமதங்கள் அடித்துப் போகாமல் நிலைநாட்டியது மட்டுமின்றி, உலக முழுவதிலும் சநாதன தர்மத்தை நிலை நாட்டப் பிறந்தவர். பிறவிப் பணிக்கு நிகழ்த்திய கால்கோள் விழாவே ஸ்வாமிஜியின் சிகாகோ பேருரைகள்.

பதினேழு நாட்களுக்குக் காலையிலிருந்து இரவு வரை இடையறாது நடைபெற்ற சர்வ

---

அட்டைப்படம்

## தாயும் சேயும்

மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டும் என்றார்கள் பெரியோர்கள். ஆம்! மழலைச் சொல் பேசும் பொற் சித்திரத்தைப் பெற்று வளர்க்கும் பாக்கியம் பெற்றவர்களல்லவா அவர்கள்? குழந்தையைக் கொஞ்சும் அந்த வேளையிலே அந்தத் தாய்க்குத்தான் எத்தனை ஆனந்தம்! அதனால்தானே வள்ளுவர் பெருமானும் குழந்தையின் மழலைச் சொல்லுக்கு ஈடு இணை கிடையாது என்று சொன்னார்?

**குழலினிது யாழினிது என்ப தம்மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர்.**

தாயும் சேயும் குதூகலத்துடன் மகிழ்ந்திருக்கும் காட்சியைத் தம் கைவண்ணத்தால் கண் முன்னே கொண்டு நிறுத்துகிறார் ஓவியக் கலைஞர் 'கல்பனா'.



''நேற்று ராத்திரி வீட்டில் படுத்துத் தூங்கும் போது, நான் பெயிலாகி விடுவதாகக் கனவு கண்டேன்!''

''நேவலையே! நீயாவது வீட்டில் படுத்துத் தூங்கும்போது கனவு கண்டாய்! நானுனால், பரீட்சை நடக்கும் ஹாலிலேயேயல்லவா அந்த 'மாதிரி கனவு கண்டேன்!''

மத மகாசபையில் ஸ்வாமிஜி பல அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

இந்தப் பிரசங்கங்களையும் சரி, இனி ஸ்வாமிஜி அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் நிகழ்த்தப் போகும் அற்புதமான சொற்பொழிவுகளையும் சரி இத் தொடரில் விரிவாகத் தர இயலவில்லை. தேனருவி போல ஒவ்வொரு துளியிலும் மாதுரியம் சொட்டும் இந்தச் சொற்பொழிவுகளில் எதனை விடுவது, எதனைச் சேர்ப்பது? ஸ்வாமிஜியைப் பற்றிப் பூரணமாக அறிய விரும்பும் அன்பர்கள் அவரது உரைகளையும், கடிதங்களையும் படித்து இந்தத் தொடரைத் தாங்களே பூர்த்தி செய்து கொள்ள வேண்டியதுதான்!

**ஸ்**வாமிஜி கூறிய பல கருத்துக்கள் காரணமாக மகாசபையில் காரசாரமான விவாதங்கள் நடந்தன. என்றாலும் எதிர்த்தவர்களும்கூட ஹிந்து மதம் என்பது வெறும் மூடநம்பிக்கைகள் மலிந்த சடங்குப் புதர் என்ற கருத்தை மாற்றிக்கொண்டு, ஒழுங்கு செய்யப்பட்ட ஒரு தத்துவ சாஸ்திரம் அது என்பதைப் புரிந்து கொண்டனர்.

மதத் தலைவர்கள் விஷயம் எப்படியாயினும் அமெரிக்க மக்கள் ஸ்வாமிஜியின் உபதேசங்களால் ஓர் ஆன்மிக உந்துதலைப் பெறத்தான் செய்தார்கள். தாங்கள் பாபிகள் அல்ல, தெய்விகம் நிறைந்த நித்திய சுத்தமான ஜீவர்கள் என்று ஸ்வாமிஜியின் வாயிலாகக் கேட்டறிந்தது அவர்களுக்கு ஓர் ஆனந்தானுபவமாக இருந்தது. வெகு எளிதில் இந்த வங்காள தேசத்து வாலிபர் சர்வமத மகாசபையின் நடு நாயகமாக, கதாநாயகராக மாறி விட்டார்! பாமஹும்ஸ தேவர் தமது சீடர் உலகத்தின் அஸ்திவாரம் வரை ஆட்டி விடுவார் என்று கூறியது பலிக்கத் தொடங்கி விட்டது.

ஸ்வாமி விவேகானந்தர்தான் சர்வமத மகாசபையின் ஜீவஸ்வரமாகி விட்டார் என்பதைச் சபை கூட்டியவர்களும் உணர்ந்து விட்டனர். தொடர்ந்து பதினேழு நாட்கள் நடைபெற்ற அந்தச் சமய விவாதத்தில், மக்கள் அலுப்புக் கொள்ளாமல் இருப்பதற்காக, 'விவேகானந்தர் பேசுவார்' என்று அறிவித்துக் கூட்டம் கூட்டி, அவரைக் கடைசியிலே பேசச் செய்து கூட்டம் கலையாது காத்தனர் அந்தக் கெட்டிக்காரர்கள்.

இனிப்புப் பண்டங்கள் விற்கும் வீதியில் செல்கிற சிறுவனுல் நாவைக் கட்டுப்படுத்த இயலுமா? வழியில் உதிர்ந்துள்ள பூந்திகளை வேறும் எடுத்துத் தின்னுதிருக்க முடியுமா? ஸ்வாமிஜியின் உரைகளை இத் தொடரில் அறவே விலக்குவது முடிகிற காரியமா? எனவே இந்தாருங்கள், செப்டம்பர் 27ந் தேதி சபையின் இறுதிக் கூட்டத்தில் ஸ்வாமிஜி ஆற்றிய அற்புத உரையிலிருந்து சில பூந்திகள்:

''கிறிஸ்துவர்கள் ஹிந்துக்களாகவோ, பௌத்தர்களாகவோ ஆக வேண்டியதில்லை. அதேபோல ஹிந்துவும் பௌத்தராகவோ, கிறிஸ்துவராகவோ மாற வேண்டியதில்லை. ஒவ்வொருவரும் மற்றவர்களின் ஆத்மிக உணர்வைத் தமதாக்கிக் கொள்ள வேண்டும். தத்தமது தனித் தன்மையை இழக்காமலே, தமது பரிணும விதிக்கேற்ப வளரவேண்டும்.

''சர்வமத மகாசபை உலகுக்கு எதையாவது உணர்த்தியுள்ளது என்றால் அது இதுவே: புனிதமும், தூய்மையும், கருணையும் எந்த ஒரு மதத்துக்கும் தனிச் சொத்தல்ல; எல்லா சமய சம்பிரதாயமும் அதி உன்னதமான ஆண் பெண்களைத் தோற்றுவித்திருக்கிறது — என்று இச்சபை நிரூபித்துள்ளது. இந்தப் பிரத்தியக்ஷ உண்மைக்கு மேல் யாரேனும் தனது மதம் மட்டும் உயிர் வாழ வேண்டுமென்றும் மற்றவை அழிய வேண்டும் என்றும் எண்ணுவானேயாகில் அவனிடம் என் இதய ஆழத்திலிருந்து அநுதாபம் கொள்கிறேன். வெகு விரைவிலேயே ஒவ்வொரு மதத்தின் கொடியிலும், 'உதவி புரியுங்கள்; யுத்தம் செய்யாதீர்கள்' என்றும், 'இணைத்துக்கொள்ளுங்கள்; அழிக்காதீர்கள்' என்றும், 'பிணைந்து வாழ்ந்து சாந்தி காண்போம்; பிளந்து போக மாட்டோம்' என்றும் பொறிக்கப்படும் என்று அவனுக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.''

விவேகானந்தர் என்ற வேதாந்தத் திருநாமம் சர்வமத மகாசபையிலும், வெளியே சிகாகோ நகர வீதிகளிலும் பற்பல அன்புக் கொச்சையில் பரவலாயிற்று. பத்திரிகைகளின் மூலமாக அந்த நாமம் சிகாகோ நகரில் மட்டுமின்றி அமெரிக்காவின் எல்லாப் பகுதிகளிலும் பரவலாயிற்று.

சாது விவேகானந்தர் என்று அடியில் எழுதப்பெற்ற அவரது உருவப் படங்கள் பல சிகாகோ நகரின் மூலை முடுக்குகளையெல்லாம் அலங்கரித்தன—நம் ஊர்களில் விநாயகப் பெருமான் வீதி தோறும் பிரதிஷ்டிக்கப்பட்டிருப்பது போல. கையைக் கட்டிக் கொண்டு ஸ்வாமிஜி கம்பீரமாக நிற்கும் கோலத்தில் ஒரு படம் உண்டே! சிகாகோ சர்வமத மகாசபையில் முதல் நாள் எடுக்கப்பட்ட இப்படம் தான் பிரதானமாகச் சிகாகோவெங்கும் திகழ்ந்தது.

(தொடரும்)

# விடியும் வேளையில்



நிலம் தெளியாத வேளை.

தெருவை அடையாளம் கண்டுபிடித்துக்கொண்டு செல்லுவதே சிரமமாக இருக்கிறது. பதினைந்து வருடங்களில் ஊரில் ஆங்காங்கே சிற்சில மாறுதல்கள். பிரமிக்கத் தக்கதாகப் பெரிய அளவில் ஏற்பட்ட மாறுதல்களில்லை. ஆற்றின் எதிரே உள்ள அரச மரத்தடிப் பிள்ளையாருக்குச் சிறிய கோவில் மட்டும் எழும்பியிருந்தது.

இருள் பிரியாத இந்த வேளையில்தான் பாகீரதி, ஈரப் புடவையும் மஞ்சள் பொலியும் முகமுமாய்ப் பிள்ளையாரை வலம் வருவாள். இன்றுகூட வந்திருப்பாளோ?... உள்ளத்தில் ஒரு நைப்பாசை.

பாகீரதி ஏன் வரவில்லை?... இனிமேல்தான் வருவாளோ?... வந்துவிட்டுப் போய்விட்டாளோ?...

ஓரிரு விநாடிகள் காத்திருத்தலில் கரைகின்றன. பிறகு பிள்ளையாரை வணங்கிவிட்டு மெல்ல ஊருக்குள் நடக்கிறேன். முன்பு வீட்டுப் பெண்களின் முக்கிய அலுவல்களில் ஒன்றாயிருந்த 'வாசல் தெளிப்பு' இப்போது வேலைக்காரிகளால் நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருக்கிறது.

இரட்டை வரிசைகளிலும் வீடுகள் அணி செய்யும் அழகிய தெரு அது. கோயில் தெரு. இதில் அதிகமாக மாற்றம் இல்லை. பழைய பாணி வீடுகளின் இடையே பட்டாமணியம் பரசுராமய்யா வீடு மட்டும் பங்களாவாக உருவெடுத்திருக்கிறது!

திரும்பி நடக்கையில் கோடி வீட்டிலிருந்து சன்னமாய் இருமல் ஒலி. கோபாலசாமியின் தாத்தாவின் குரல்! இன்னுமா உயிருடன் இருக்கிறார் இவர்! அப்போதே வயது எண்பதுக்கு ஒன்றிரண்டு கூட இருக்குமே?... காலத்தையும் வயதையும் வென்றி கொண்ட அந்த மனிதரைக் கண்டு வணங்கி ஆசி பெற வேண்டும் என்று என் மனத்தில் சட்டென்று ஓர் ஆவல். ஆனால் முதலில் என் பாகீரதியைப் பார்க்காமல் வேறு எவரையும் காண விரும்பாத உள்ளம் குழம்பித் தயங்குகிறது.

கண நேரம் தாமதித்ததில், உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த பார்வதியின் — கோபாலசாமியின் பாட்டி பார்வதியின்—பார்வைக்கு இலக்காகிவிடுகிறேன்.

அவள் வாசலுக்கு வருவதற்குள் அவசரம் அவசரமாய் மேல் துண்டை எடுத்துத் தலையில் போர்த்துக் கொண்டு விரைவாக 'ஒற்றைத் தெருவின் புறம் திரும்பி நடக்கிறேன். ஆயினும் என்னை அடையாளம் கண்டு கொண்டு அந்தப் பாட்டி மகனிடம் படபடத்த குரல் பாய்ந்து வந்து என் செவியில் நிறைகிறது.

''...அமாக்!...சீமாச்சுடா ராமு!.... பாகீரதியின் மஞ்சளும் குங்குமமும் ஒரு வழிய இவனை இங்கே கொண்டு வந்து சேர்த்துடுத்து பாவம்!... இரண்டுங் கெட்டானாகத் தவிச்சுண்டிருந்தான்... இன்னிக்கு வெள்ளி.... விடிஞ்ச வேளை... நல்ல வேளை...''

நெஞ்சில் வண்டி நெருப்பை வாரியிறைத்ததுபோலிருந்தது எனக்கு.

'இரண்டுங்கெட்டான்!'

'பாரதி!... உனக்கு இதுவரை இந்தப் பெயரையா கொடுத்திருந்தேன்!' என் உள்ளத்தில் ஒரு விநாடி விவரிக்க இயலாத இலேசம்... 'இல்லை... பாரதி!... இனி நீ இரண்டுங்கெட்டான் இல்லை. அந்த அவப் பெயரை நீக்க வந்துவிட்டேன் நான்!'

என் நடையில் வேகம் கண்டது. வீட்டு வாசலில் கோலமிட்டுக் கொண்டிருந்த பெண்கள் என்னைக் கண்டதும் பரபரப்புடன் உள்ளே ஓடுகிறார்கள். மறு விநாடி உள்ளேயிருந்த மனிதர்கள் அனைவரும் நத்தம் விட்டுத் திண்ணைகளில் வந்து நின்று, என்னைக் கண்டதும் ஒருவருக்கொருவர் கிசுகிசுத்துக் கொள்கிறார்கள்.

''....சிமார்கவேதான்! அப்புறமாப்போய் விசாரிக்கிறேன்...'' நாலாவது வீட்டு நாகசாமியின் கட்டைக் குரல்.

வாசலில், பிரும்மாண்டமான தாமரைக் கோலத்துக்குச் செம்மண் கட்டிக் கொண்டிருந்த இளம் பெண் என்னைக் கண்டதும் சட்டென்று நிமிருகிறாள். அவள் கண்களைச் சந்தித்த என் கண்களில் கரை காணாத மகிழ்ச்சி வழிகிறது.

# உமாகுருமூர்த்தி

கல்யாணி!..: கல்யாணியா இது? ஆறு மாதக் குழந்தையாக நான் அன்று கண்ட கல்யாணியா இவள்!...

''....கல்யாணி!....''

புரியாத திகைப்பில் அவள் பார்வை என் மேல் ஊடுருவி நிற்கிறது. அவள் சங்குக் கழுத்தில் புத்தம் புதிய தாலிச் சரடு!

'அப்படியானால்... கல்யாணிக்குக் கல்யாணமாகிவிட்டதா?'

விவரிக்க இயலாத துன்பத்துடன் ஒருவித இன்பமும் கூட என் இதயத்தை அழுத்துகிறது. கல்யாணிக்குக் கல்யாணமாகி விட்டது! அதைக் காணக்கூட இந்தப் பாவிக்குக் கொடுத்துவைக்கவில்லை.... 'பாரதி!.... நீ நானாகி, என் கடமைகளையும் சேர்த்து ஒன்றியாக நிறைவேற்றிவிட்டாய்!...'

''கல்யாணி!''

உள்ளத்தைப் போலவே என் குரலிலும் நெகிழ்ச்சி.

''யார் நீங்கள்?''

''....நான் ... நான்தான்.... உன்....''

தடுமாற்றத்துடன் வெளிவந்த சொற்கள், உள்ளிருந்து தோளில் சாத்திய குழந்தையுடன் வந்து கொண்டிருந்த வாலிபனைக் கண்டதும் தடைப்படுகின்றன.

''அண்ணா!... யாரோ வந்து...''

ஒரு விநாடி அவன் பார்வை என்மேல் அலைபாய்ந்து படிகிறது. ''அப்பா!.......'' உணர்ச்சிக்குவியலாய்ப் பரபரக்கிறான் அவன். ''யாரோ இல்லை, கல்யாணி!... அப்பா!... நம் அப்பாதான் இவர்!... இவன் கல்யாணி அப்பா.... போன மாதம்தான் 'கல்யாணமாயிற்று. பக்கத்து டவுனில்தான் புக்ககம்... மறு பிறந்தகம் அழைத்து வந்திருக்கிறேன்.''

பரபரப்புடன் கூவியபடியே குழந்தையைக் கீழே இறக்கிவிட்டு என் காலடியில் வீழ்கிறான் வாசு: அவனைப் பின்பற்றுகிறாள் கல்யாணி: இரு கரங்களையும் உயர்த்தி இருவரையும் ஆசீர்வதித்தேன்.

''...இவன் உங்கள் பேரன் அப்பா!..: என் மகன்...'' பெருமையும் உரிமையும் கலவையிடும் குரல்.

அறியாத சிறுவனாக விட்டுச் சென்ற என் மகன் வாசு இப்போது 'அப்பா'வாகிய நிலையில் தன் அப்பாவைக் காண்கிறான்!

வாசுவின் மகனை வாங்கக் கை நீட்டுகிறேன். வேற்று முகம் கண்டு வீறிட்ட குழந்தையை அணைத்து அவன் சமாதானம் செய்கையில் உள்ளேயிருந்து அவசரமாக வந்த அழகிய பெண் ஒருத்தி என்னை வணங்கி எழுகிறாள்.

''உங்கள் மருமகள் அப்பா!....''

''புரிந்தது...''

அவள்... என் பாரதி... அவள் எங்கே?

பதைபதைப்பு அடங்காத நிலையில், ''...அம்மா... உன் அம்மா எங்கே வாசு?..'' என்று வினவுகிறேன்.

''அம்மா!... அம்மாவுக்கு...... உள்ளே வாருங்கள் அப்பா...'' பதற்றத்துடன் நான் உட்புறம் நுழைய யத்தனிக்கையில் இடது புறத்து அறையிலிருந்து சன்னக் குரல் எழுகிறது. பாரதியின் குரல்!

குரலைப் போலவே உடலும் மெலிந்துதான் இருப்பாள். குடும்ப பாரத்தைப் பதினைந்து வருட காலம் தனியாகத் தாங்கிய அயர்வு.

''....இப்போது அப்பாவை இங்கே அழைத்து வராதே வாசு....''

உச்சந் தலையில் ஓங்கி அறைந்தாற்போலிருந்தது எனக்கு.

பாரதியா இப்படிப் பேசுகிறாள்?...:

அவள் பேசுவதில் என்ன தவறு? அவளுக்கு என் மீது கோபம் இருப்பது நியாயம்தான்.

முப்பத்தைந்து வயதுகூட நிரம்பாத நிலையில் வாழ்வின் ஆசாபாசங்கள் நிரம்பிய அவள் மனக் கலசத்தை அரைக் கணத்தில் உடைத்தெறிந்துவிட்டுப் பத்து வயதுப் பாலகனையும், அவனுக்குப் பின் பத்து வருடங்கள் கழித்து அருமையாகப் பிறந்த பெண் மகளையும் வளர்த்து ஆளாக்கவேண்டிய பெரும் பொறுப்பையும் அவள் தலையில் சுமத்திவிட்டுக் குடும்பப் பொறுப்பையும் உதறிவிட்டு நாடோடியாகி இன்று திடீர் விஜயம் செய்திருக்கும் என்மேல் அவளுக்குக் கண்டிப்பாகக் கோபம் இருக்கத்தான் கூடும்.

'பொறுப்பில்லாத பிள்ளையாக இருக்கிறானே' என்று அடி நாளில் அலுத்துக் கொண்ட அம்மா, உலகத்துத் தாய்மார்கள் அனைவரையும் போலவே, 'ஒரு கால் கட்டுப் போட்டால் சரியாகிவிடுவான் மகன்' என்று நம்பியவளாய், குணத்திலும் அழகிலும் பண்பிலும் சிறந்த பாரதியை எனக்கு மனைவியாகத் தேர்ந்தெடுத்தாள்.

ஆனால்...

உட்கார்ந்து சாப்பிட வசதியாக, ஒரே மகளுக்கு வீடும், பொருளும் என் அப்பா தேடி வைத்திருந்தார்.

இன்பம் வறண்டு கிடந்த சில வருடங்களில் பாரேதிக்கு ஆறுதலாகக் குழந்தை வாசு இருந்தான். காலப் போக்கில் அவன் கூற்று உண்மையாகி விடுமோ என்று அச்சம் தோன்ற ஆரம்பித்தது எனக்கு. பாங்கியிலுள்ள ரொக்கம் அநேகமாகக் கரைந்துபோய் வீட்டின் மீது கை வைக்க வேண்டிய நிலை வருமோ என்கிற ஐயம்.

அப்போது கல்யாணி பிறந்த சமயம். ஒரு நாள்......

'பாலாரிஷ்டம்' காரணமாய் நலிந்து கிடந்த குழந்தை வாசுவை வைத்தியரிடம் காண்பித்து விட்டு வந்ததும், மருந்து வாங்கப் பணமில்லாத காரணம் பாரேதியைப் பொறுமையிழக்கச் செய்திருக்க வேண்டும். பதற்றத்துடன் அவள் பொரிந்து தள்ளிய சொற்களுக்குப் பதில் எதுவும் கூறாமல் சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே கிளம்பியவன்தான்.

வாழ்வில், அனுபவம் எனக்குப் பொறுப்பை அளித்தது. ஐம்பது வயதுக்கு அப்புறம்.... காலம் கடந்த பொறுப்பு!..... ஓரளவுக்காவது பொருளீட்டுக் கொண்டு நான் பாரேதியைக் காண வேண்டும் என்ற வைராக்கியத்தில் கழிந்து பத்து வருடங்களில்......

போன வாரம்....

ஒரு நாள்,

அதிகாலை உறக்கம் கலைந்து எழுந்ததுமே, கொஞ்ச நாளைக்குப் பாரேதியின் அருகில் இருந்தால் தேவலை என்று உள்ளத்தில் ஒரு குரல் சொல்லிற்று.

மாலை ரயிலிலேயே என் பயணம் தொடங்கிற்று. நான் எதிர்பார்த்தபடி, அந்த ஊரும் என் வீடும் மாறவில்லை. குழந்தைகள் வளர்ச்சியில் உருமாறியிருந்தாலும் என்னிடம் கொண்ட உள்ளன்பில் மாறவில்லை. ஆனால்.. ஆனால் பாரேதி?

''வாசு!.... கொஞ்சம் இங்கே வாயேன்.''

ஒருக்களித்திருந்த கதவுக்கப்பால் பாரேதியின் முகம் கூடத் தெரியவில்லை.

உள்ளே சென்ற வாசு சற்றைக்கெல்லாம் திரும்புகிறான்.

''ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டு ஒரு மாமாங்க காலத்துக்கு மேலானால் சுவாமி சந்நிதியிலே நெய் விளக்குப் போட்டுத்தான் பார்க்கணுமாம் அப்பா!....''

என் பாரேதி மாறவில்லை! அசுர வேகத்தில் முன்னேறி வரும் இந்த அவசர யுகத்தில், அவள் பழமையும் மாறவில்லை!

''....அப்போ, கோவிலுக்குப் போகட்டுமா?..... நீ.... அம்மாவை அழைத்துக் கொண்டு......''

''அம்மாவால் அதிகம் நடமாட முடியாது அப்பா!.....''

என் திகைப்பைக் கண்டு அவன் தொடருகிறான். '''ஹார்ட்'டிலே கான்சர்...இப்பவோ அப்பவோன்னு கொஞ்ச நாளா....''

என் இதயத்தில் யாரோ கல் எறிந்தாற் போன்ற கடும் வலி.

பாரேதிக்குப் புற்று நோயா?.... என் இதயத்தின் 'இதயத்தில்' புற்று? வாழ்வின் துயரமே புற்றாக வளர்ந்து........ ஐயோ!...

''....வாருங்கள் அப்பா! பூஜையறையிலேயே......''

வாசுவைத் தொடர்ந்து அறையினுள் நுழைகிறேன். ஐந்து முகங்கள் சுடர் விடும் வெள்ளிக் குத்து விளக்கு. அதிலே மணல் மணலாய்ப் புத்துருக்கு நெய்யின் மணம். கசந்த மலர்களின் ரம்மியமான வாசனை. நெடுஞ்சாண்கிடையாக விழுந்து எழுகையில், தெய்வத்தின் படங்களுக்குச் சற்றுத் தள்ளினாற்போல்.....

ரோஜா மாலை சூடிய என் புகைப்படம்!

எனக்கு மேனி விதிர்க்கிறது.

பிரயாசையுடன் கடவுளைத் தொழுது விட்டு என் காலடியில் சிரம் பதித்த மெலிந்த உருவத்தைத் தாங்கி அணைத்து கொள்கிறேன்.

''......இனிமேல் நான் 'இரண்டுங் கெட்டான்' இல்லை... சுமங்கலியாகவே... உங்கள் ம...டி...யி...ல்...''

பேச்சின் சிரமத்தால் அவளுக்கு மூச்சின் இரைப்பு. ஆசுவாசப்படுத்தி, கைத் தாங்கலாக அணைத்துச் சென்று கட்டிலில் படுக்க வைத்திருக்கிறேன்.

''இனி மேல் என் உயிருள்ள வரை உன்னை விட்டுப் போக மாட்டேன் பாரூ!.... இனி உனக்கு எல்லாம் சரியாகி விடும். நிம்மதியாகக் கொஞ்ச நேரம் தூங்கு...''

கிணற்றிலிருந்து நீர் இறைத்துக் கை, கால்களைச் சுத்தம் செய்து கொண்டு தோட்டத்தின்புறம் பார்வையைச் செலுத்துகிறேன். பாரேதிக்கு எப்போதுமே பூவின் மேல் கொள்ளை ஆசை. நித்தியமல்லியும், ரோஜாவும், செம்பருத்தியுமாய் வண்ண வண்ண மலர்கள் கண்களை நிறைக்கின்றன. மலர்ந்து சிரிக்கும் ஒற்றை ரோஜாவை என் கையாலேயே பாரூக்குச் சூட்ட என்னுள் அடக்க முடியாத ஒருவித அசட்டு ஆவல்...

கைகள் பூவைப் பறிக்க முயலுகையில், கால்களில் ஏதோ ஸ்பரிச உணர்வு; உடலில் 'சுள்'ளென்ற வெயிலின் உறைப்பு.

''அப்பா!.... நகருங்கள்.... நகருங்கள் அப்பா!..... அரணை பாம்பரணை....''

எனக்குத் திடீரென்று தலை 'கிர்'ரிடுகிறது; கண்கள் இருளுகின்றன.

'ஐயோ, பாரூ! அரணை என்னைத் தீண்டி விட்டது. அரணை நக்கினால் அரை நிமிஷத்தில் மரணம். உன் 'இரண்டுங் கெட்டான்' நிலையைப் போக்க வந்து விட்டேன் என இறுமாந்திருந்தவன், இ...தோ போய்க் கொண்டே இருக்கிறேன்...'

''அப்பா! அப்பா!..... என்ன ஆயிற்று உங்களுக்கு?...'' வாசுவின் அலறல் எங்கிருந்தோ கேட்டது.

என் தலை... அவள் மடியில்...

''ஐயோ பாரூ! நான் போகிறேன்...இவ்வளவு காலம் கழித்து இதற்குத்தான் இங்கு வந்திருக்கிறேனா? இதற்கு நான் வராமலே இருந்திருந்தாலும், 'இரண்டுங் கெட்டானாக' உன் பூவும் மஞ்சளுமாவது பிழைத்திருக்குமே?..., பாரூ!.., என் பாரூ.....''



ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

"Dhideerex"
(FOR INSTANT PREPARATION)

( Registered )

## திடீரெக்ஸ்

## திடீர் இட்லி, சாம்பார்

( 2 தனி பவுடர்கள் )

**3 நிமிஷங்களில் தயார்!**

மேற்படி பவுடர்களைத் தண்ணீரில் கலந்த 3 நிமிஷங்களில் உபயோகத் திற்குத் தயார். ஊற வைக்கவோ, அரைக்கவோ தேவையில்லை.

ஒரு 32 அவுன்ஸ் பாட்டில் பவுடரில் ஒரு பக்கெட் நிறைய ருசிமிக்க தென்னிந்திய **தக்காளி சாம்பார்** இருக்கிறது. எமது சாம்பார் பவுடர் 2 ஆண்டுகளுக்கு பாக்டரி புதுமையுடன் இருக்கும். திறந்த பின் 60 நாட்கள் வரை உபயோகிக்கலாம்

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.**
( போன்: 23665 )
46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

## எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்க முடியாத அரிப்பு, வெடிப்பு, மேனாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர் தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டு பண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm] வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.





## KALINGA POLES

STEP DRAWN STEEL TUBULAR POLES FOR POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.

KALINGA TUBES LTD. 33, Chittaranjan Avenue, Calcutta-12
Works—Choudwar, (Orissa)

புதியது

# ப்ரோடெக்ஸ் ஒரு சர்வ-காரிய டால்க். அது குடும்பத்தினர் அனைவருக்கும் மிகச்சிறந்தது.

"ப்ரோடெக்ஸ் எனக்கு
விருப்பமானது. ஏனெனில்
, அது எந்தக் குடும்பத்திற்கும்
ஏற்றபடி சிக்கனமானது"

"நாள் முழுதும் புதுமையுட
னிருக்க நான் ப்ரோடெக்ஸையே
விரும்புகிறேன்"

"எனது மிருதுவான
சருமத்தைப் பாதுகாப்பதால்
அம்மா ப்ரோடெக்ஸையே
விரும்புகிறாள்"

ப்ரோடெக்ஸ் ஒரு உயர்ந்த ரக, மனோரம்மிய
நறுமணமுடைய, சர்வ-காரிய டால்க். எல்
லாக் குடும்பத்தினருக்கும், குளித்தபிறகும்,
கோடைக்காலத்தில் குளிர்ச்சிக்கும் மிகச்
சிறந்தது. ப்ரோடெக்ஸ் வாங்குங்கள்-மிக
மிகப்பெரிய டப்பா-மிகமிகக் குறைந்த விலை.




# ப்ரோடெக்ஸ்

ஆல்-பர்ப்பஸ் டால்கம் பௌடர்

PTP-8-7-TAM.

# குருக்ஷேத்திரத்தில் கண்ணன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

வடநாட்டில் பிரசித்தமான நதிகள் கங்கையும் யமுனையும்தான். அவை இரண்டும் கலக்கின்ற பிரயாகையிலே சரஸ்வதி நதியும் கலக்கிறது என்பர். ஆனால் இந்த சரஸ்வதி நதியை அங்கு நாம் காண்பதில்லை. இந்த சரஸ்வதி நதி டில்லிக்கு மேற்கே நூறு மைல் தூரத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. இந்த சரஸ்வதி நதிக் கரையில்தான் முனிபுங்கவர் இருந்து வேதங்களை ஓதியிருக்கிறார்கள்; பிரம்மாவும் தேவர்களும் சேர்ந்து யாகங்கள் செய்திருக்கிறார்கள். வசிஷ்டரும் விசுவாமித்திரரும் இருந்து தவம் செய்து முக்தி பெற்றிருக்கிறார்கள்; பாண்டவர்களும் கௌரவர்களும் போரிட்டிருக்கிறார்கள்; பகவான் கண்ணன் அருச்சுனனுக்குக் கீதோபதேசம் செய்திருக்கிறான்; வேத வியாசர் இருந்து பாரதக் கதை எழுதியிருக்கிறார்; குரு என்னும் அரசன் அங்கிருந்து அரசாண்டிருக்கிறான். மனு இருந்து நீதி சாஸ்திரம் எழுதியிருக்கிறான். இத்தனை புராணப் பிரசித்தியுடைய இடத்திலே, பின்னர் சரித்திர காலத்திலேயும் பலப் பல போர்கள் நடந்திருக்கின்றன. இந்து மன்னர் பலர் தங்கள் மகுடங்களை இழந்திருக்கிறார்கள். முஸ்லிம் மன்னர்கள் சிங்காதனத்தைத் துறந்திருக்கிறார்கள். மராத்தியர்களும் சீக்கியர்களும் தங்கள் வலியிழந்திருக்கிறார்கள். இப்படி ரத்தம் சிந்திச் சிந்தியே சிவந்து கிடக்கும் இடம்தான் குருக்ஷேத்திரம்.

குருக்ஷேத்திரம் என்ற உடனேயே நம் கண் முன் வருவது பாரதப் போர்தான். அதன்பின்னும் பலப் பல போர்கள் நடந்த இடம்தான் அது. இது காரணமாகவே குருக்ஷேத்திரம் என்ற சொல்லுக்கே போர்க்களம் என்ற பொருள் வழங்க ஆரம்பித்து விட்டது. நாம் இன்று அந்தக் குருக்ஷேத்திரத்துக்கே செல்கிறோம். நாம் செல்வது போர்க்களத்துக்கு அல்ல. நாம்தான் 'யாரோடும் பகைகொள்ளலம்' என்று கம்பன் வகுத்த வழியில் செல்பவர்கள் ஆயிற்றே. நாம் செல்வது கண்ணன் கீதோபதேசத்தைக் கேட்கவே. குருக்ஷேத்திரப் போரில், பார்த்தனுக்குச் சாரதியாய் அமைந்து தேரோட்டுகிறான் கண்ணன். போர்க்களத்தில் பிதாமகர் பீஷ்மர் போன்ற உறவினர்களையும் எதிரிகளாகக் கண்டவுடனே பார்த்தன், இவர்களை யெல்லாம் கொன்று குவித்து நாம் பெறப் போகும் பலன் என்ன என்று மயங்கி, வில் கையினின்று தரையில் விழ அலமருகிறான். அவனது சோர்வைக் கண்ட கண்ணன் 'கருமத்தைச் செய்யக் கலங்காதே. உனக்கென்று ஒன்றும் இல்லை. எல்லாவற்றையும் முடித்து வைப்பவன் நானே' என்று உபதேசிக்கிறார்.

> மாயை என்று ஒருத்தி தன்பால்
> மனம் என்னும் மைந்தன் தோன்றித்
>
> தூய நல்லறிவன் தன்னைத்
> தோற்றம் இன்றாக்கி வைத்தான்
> தாயொடு, தந்தை, மக்கள்,
> தாரம் என்று இவர்பால் வைத்த
> நேயமும் அவன் தனாலே
> நிகழ்ந்த ஓர் நினைவு கண்டாய்!

என்றும்,

> என்னை நீ புகலக்கேண்மோ!
> எங்கும் ஆய் யாவும் ஆகி
> மன்னிய பொருளும் யானே
> மறைக்கு எலாம் முடிவும் யானே

என்றும் உரைக்கிறான் கண்ணன். இப்படி வில்லிப்புத்தூரார் பாரதத்தில் காணலாம்.

குருக்ஷேத்திரம் செல்ல டில்லியிலிருந்து அம்பாலா நோக்கிச் செல்லும் ரயிலில் ஏற வேண்டும். டில்லியிலிருந்து கிட்டத்தட்ட நூறு மைல் சென்றதும் குருக்ஷேத்திரம் ஜங்ஷன் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். காரிலேயே செல்வதானால் டில்லியிலிருந்து வடமேற்காக நூறு மைல் செல்ல வேணும். வடநாட்டிலுள்ள ரோடுகளில் அகலமாகவும் நன்றாகவும் ஆக்கப்பட்டிருக்கும் ரோடு இது ஒன்றுதான். போகிற வழியிலே பானிபட் என்று ஓர் இடம் வரும். இந்தப் பெயரைக் கேட்டவுடனேயே இங்கு நடந்த போர்களைப் பற்றி நாம் பள்ளியில் படித்த சரித்திரம் ஞாபகத்துக்கு வரும்.

பாண்டவர்கள் காலத்தில் குருக்ஷேத்திரம் எப்படி இருந்ததோ? ஆனால் இன்று பொலிவு இழந்து ஒரே பொட்டலாகத்தான் இருக்கிறது. அக்காலத்தில் இருநூறு சதுர மைல் விஸ்தீரணமுள்ளதாய், சரஸ்வதி நதிக்கும், யமுனை நதிக்கும் இடையில் பலப்பல ஊர்களும், ஊர்களில் கோயில்கள் நிறைந்ததாயும் இருந்தது என்று வாமன புராணம் கூறுகிறது. ஆதியில் இந்தப் பிரதேசத்தை உத்தரவேதி

கீதோபதேசம் நடக்கிறது

லக்ஷ்மிநாராயணன் கோயில்



என்றே அழைத்திருக்கின்றனர். அதன்பின் குருமகாராஜன் இந்த இடத்தில் தனது சாம்ராஜ்யத்தை நிறுவியிருக்கிறான். இந்தப் பிரதேசத்தை ஒரு சிறந்த இறை அருள் நிறைந்த கேந்திரமாக அமைக்க முயன்றிருக்கிறான். அதற்காகச் சிவனது ஊர்தியான நந்தியையும் யமனது வாகனமாகிய எருமைக் கடாவையுமே இரவலாக வாங்கி அவைகளை ஏரில் பூட்டி அங்குள்ள நிலத்தை உழுது பண்படுத்த முனைந்திருக்கிறான். அங்கு அவனைச் சந்தித்த விஷ்ணு 'இங்கு எதையப்பா விதைக்கப் போகிறாய்?' என்று கேட்டதற்கு, 'சத்தியம், தருமம், தவம், அன்பு, யோகம் முதலிய பொருள்களை விதைக்கப் போகிறேன்' என்றிருக்கிறான். விஷ்ணு விரும்பியபடி தன் உடலையே துண்டு துண்டாக வெட்டி அவைகளையே விதையாக விதைக்க அனுமதித்திருக்கிறான். அவனது தியாகத்தை மதித்த பரந்தாமனும் அந்த இடம் அவன் பேராலேயே வழங்கவும், அந்த இடத்தில் வந்து இறப்பவர்களுக்கு முக்தி அருளவும் இசைந்திருக்கிறான். அதனால்தானோ என்னவோ கௌரவரும் பாண்டவரும் இந்த இடத்தைத் தங்கள் போர்க்களமாக அமைத்திருக்கின்றனர். இங்கு செல்லும் நாமும் நம் உயிரையே விட்டு முக்திப் பேறு பெறலாம் என்றால் அந்தப் பொல்லாத யமன் நம்மை அணுக அஞ்சி ஒதுங்கி விடுகின்றானே.

குருக்ஷேத்திரப் பூமியை முழுவதும் சுற்றி வர நம்மால் இயலாது. அத்தனை தூரம் அது பரந்து கிடக்கிறது. அங்கு ஏழு வனங்கள், ஏழு நதிகள், ஏழு சரோவரங்கள், ஏழு கூபங்கள் எல்லாம் இருந்திருக்கின்றன அன்று. அவைகளில் எவை எவை இன்று எஞ்சி நிற்கின்றன என்று கூற இயலாது. என்றாலும் நாம் குருக்ஷேத்திரத்தின் ரயில்வே ஸ்டேஷனைக் கடந்து ஒரு மைல் சென்றதும் தானேஷ்வர் என்ற பிரதேசத்தை அடைவோம். அதுதான் நாம் முதலில் செல்ல வேண்டிய இடம். அங்குதானே பிரம்மசரஸ் என்ற பெரிய குளம் இருக்கிறது. இதுதான் குருக்ஷேத்திரத்திலுள்ள பெரிய குளம். ஆதியில் இது 60 சதுர மைல் விஸ்தீரணமுடையதாக இருந்ததாம். இன்று 1442 அடி நீளமும் 700 அடி அகலமும் உள்ளதாயிருக்கிறது. இன்று இக்குளத்தின் கீழ்க்கரையிலும் வட கரையிலும் படிக்கட்டுகள் இருக்கின்றன; வடகரையில் நிறைய மரங்கள் நிற்கின்றன. இக்குளத்தில் உள்ளே சில தீவுகள் இருக்கின்றன. இந்தப் பிரம்மசரஸை ஒட்டியே ஒரு சிறிய குளமும் இருக்கிறது. அதனைச் சன்னிஹித் குளம் என்கின்றனர். இது ஒரு சிறிய குளமே; 1500 அடி நீளமும் 300 அடி அகலமும் உடையதாய் இருக்கும். இக்குளக் கரைகளிலேதான் சூரிய கிரகண காலத்தில் மக்கள் திரளாகக் கூடுகின்றனர். அது ஒரு பெரிய மேளாவாகவே நடக்குமாம். இக்குளங்களுக்குக் கொஞ்சம் மேற்கே உள்ள சமவெளியில்தான் லக்ஷ்மி நாராயணன் கோயில் இருக்கிறது: அது டில்லியில் பிர்லாமந்திர் போலவே இருக்கிறது; சமீப காலத்தில்தான் கட்டப்பட்டிருக்க வேணும். இங்குள்ள பிரதான சந்நிதியில்தான் கண்ணன் பார்த்தனுக்குக் கீதை உபதேசம் செய்யும் காட்சி பளிங்குச் சிலை வடிவில் அமைக்கப்பட்டிருக்கிறது. பக்கத்திலுள்ள சின்னக் கண்ணன் நல்ல அழகான வடிவம். இந்த வட்டாரத்திலேயே சந்திர கூப தீர்த்தம், பாதாள கங்கை முதலியவற்றோடு ஒரு காளி கோயிலும் இருக்கிறது.

கண்ணன் கீதை உபதேசம் செய்த இடம் இது அல்ல. அது இங்கிருந்து தெற்கே நாலு மைல் தொலைவில் இருக்கிறது என்பர். சரி என்று காரைத் திருப்பி அந்த இடத்துக்கும் செல்ல வேண்டியதுதான். அங்கும் ஒரு பெரிய ஆலமரம், அதைச் சுற்றி ஒரு பீடம் இருக்கிறது. அந்த ஆலமரத்தடியில் கீதை உபதேசம் நடந்தது என்கின்றனர். அப்படியானால் அந்த ஆலமரம் அந்த இடத்தில் குறைந்தது ஐயாயிரம் வருஷ காலமாக நின்றிருக்க வேணும். இடை இடையே இந்த மரம் வாடி வாடிப் பின்னரும் தழைத்திருக்கிறது என்கின்றனர். அதுதான் கீதோபதேசம் நடந்த இடம் என்பதைக் குறிக்க ஒரு சிறிய தேரும் அந்தத் தேரில் கண்ணன் பார்த்தன் பொம்மைகளும் வைத்திருக்கின்றனர். பக்கத்திலே ஒரு சிவன் கோயிலும் இருக்கிறது: அக்கோயிலை ஐம்பது வருஷங்களுக்கு முன் காஷ்மீர் மகாராஜா கட்டி வைத்தாராம். இன்னும் தர்பங்கா மகாராஜா முதலியோர் இங்கு பல சிறு கட்டடங்கள் கட்டி வைத்திருக்கின்றனர். அங்கு ஒரு கீதாமந்திரும் இருக்கிறது. அங்கு ஒரு சுவாமிஜி இருக்கிறார். அவரையே சத்தியானந்த சரஸ்வதி கீதாயி என்று மக்கள் போற்றி வணங்குகின்றனர். அங்கு ஒவ்வொரு வருஷமும் மகர மாதத்தில் கீதா ஜயந்தி உத்சவம் நடக்கிறதாம். பதினெட்டு நாட்கள் நடக்கும் இந்த உத்சவத்துக்கு நாட்டின் பலபாகங்களிலிருந்தும் மக்கள் வந்து கூடுகின்றனர்.

தானேஷ்வர் ஜோதிசரஸ் மாத்திரம்தான் குருக்ஷேத்திரம் என்றில்லை. இந்த வட்டாரத்தில் இன்னும் பல மைல்கள் விஸ்திரணம் சேர்ந்தே குருக்ஷேத்திரம் என்பர். இன்னும் இங்கு பார்க்க வேண்டிய இடங்களுமுண்டு. பிரித்வி ஈசவரர் மகாதேவ் கோயில் பிரபலமானது. ஆதியில் இதைப் பிருது மகாராஜா கட்டினார் என்றும் திரும்பவும் மராத்தியர்கள் கட்டி வைத்திருக்கிறார்கள் என்றும் சொல்கிறார்கள்; சரஸ்



"கேட்கிற கேள்விக்கு வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பதில் சொல்லணும். பிரிட்டிஷ் ஆளுகைக்கு உட்படு முன்னர் நம் தேசம் எப்படி இருந்தது?"

"துண்டு, துண்டாகப் பிரிந்து இருந்தது சார்!"

வதி நதிக் கரையிலே சரஸ்வதி தேவிக்கும் ஒரு சிறு கோயில் இருக்கிறது. கார்த்திகேயனுக்கும் ஒரு கோயில் இருக்கிறது. இந்தக் கார்த்திகேயன் நம் நாட்டு முருகனே என்றாலும் இந்த வட்டாரத்தில் பிரம்மச்சாரியாகவே நிற்கிறான். ஆதலால், பெண்களை அந்தக் கோயிலுக்குள் அனுமதிப்பதில்லை. அங்கு வரும் யாத்திரிகர்கள் சிந்தூரத்தை நிவேதித்து அணிந்து கொள்கின்றனர். இந்தக் கோயில்களோடு சதுர்முக மகாதேவர் கோயில் என்றும் ஒரு கோயில் இருக்கிறது. அங்குள்ள சிவலிங்கம் நான்கு முகங்களோடு கூடியிருக்கிறது.

இன்னும் இந்த குருக்ஷேத்திரப் பகுதியில் உள்ள எண்ணிறந்த தீர்த்தக் கட்டங்களில் அவசியம் என்று கருதினால் ஒவ்வொரு தீர்த்தக் கட்டத்திலும் தீர்த்தத்தை அள்ளித் தலையில் புரோட்சித்துக் கொண்டு திரும்பலாம்.

குருக்ஷேத்திரம் ஒரு ருத்ர பூமியே என்றாலும் கீதோபதேசம் நடத்த கண்ணன் தேர்ந்தெடுத்த இடம் என்பதால் எவ்வளவோ புனிதமானதாகக் கருதப்படுகிறது. முஸ்லிம்களுக்குக் காபாவும் கிறிஸ்தவர்களுக்கு ஜெருசலமும் எவ்வளவு புனிதமான இடமோ, அவ்வளவு புனிதம் உடையதாகவே இந்தக் குருக்ஷேத்திரமும் கருதப்படுகிறது.

# அமிர்தசரஸில் தங்கக் கோயில்

நம் நாட்டில் அன்று பாற்கடல் ஒன்று இருந்திருக்கிறது. அக்கடலைக் கடைய முற்பட்டிருக்கின்றனர் தேவர்கள். அது அவர்களால் மட்டும் முடிகிற காரியமாக இல்லை. ஆதலால் அசுரர்களையும் உடன் சேர்த்திருக்கின்றனர். மேரு மலையையே மத்தாக நட்டு வாசுகியையே கயிறாகக் கொண்டு அக்கடலைக் கடைந்திருக்கின்றனர். கடலுள் மேரு தாழ்ந்து போகக் கூர்ம வடிவில் பரந்தாமனே வந்து தன் முதுகில் தாங்கியிருக்கிறான் மத்தாகிய மேரு மலையை. அப்படிக் கடைந்த பாற்கடலிலிருந்தே திருமகள் எழுந்திருக்கிறாள். கடைசியில் அமுதம் பிறந்திருக்கிறது. பரந்தாமனே மோகினி வடிவில் வந்து அசுரர்களை ஏமாற்றிவிட்டுத் தேவர்களுக்கே அமுதம் முழுவதையும் கொடுத்திருக்கிறான். அதனால் அவர்கள் அமரராகி யிருக்கின்றனர். இது புராணக் கதை. மணிவாசகப் பெருமான் இறைவனையே ஓர் அமுதப் பெருங் கடல் என்கிறார். ''நம் புலன்கள் ஆரவந்து என்னை ஆட்கொண்டு உள்ளே புகுந்த மாலமுதப் பெருங்கடல்'' அவன் என்றே திருவாசகத்தில் கூறுகிறார். இந்த அமுதப் பெருங் கடல் நமது கட்புலனால் காணும் வகையிலும் நாமெல்லாம் குடைந்து ஆடும் வகையிலும் அமைந்திருக்கிறது. அந்த அமுதக் கடல் இருக்கும் இடத்துக்கே அழைத்துச் செல்லப்போகிறேன். என்ன வருகிறீர்களா?

டில்லிக்கு மேற்கே முந்நூறு மைல் தூரத்தில் பஞ்சாப் ராஜ்யத்தில் இருக்கிறது இந்த அமுதக் கடல். அதனைத்தான் அமிர்தசரஸ் என்று அழைக்கின்றனர் மக்கள். இது சீக்கியர்களின் புண்ணியத் தலங்களில் முதன்மையானது. பாகிஸ்தான் எல்லையிலிருந்து கிழக்கே பதினாறு மைல் தூரத்தில்தான் இருக்கிறது. டில்லியிலிருந்து பிரான்டியர் மெயிலில் ஏறினால் அமிர்தசரஸிலே சென்று இறங்கலாம். இல்லை, டில்லியிலிருந்து அம்பாலா, லூதியானா, ஜலந்தர், லாகூர் வழியாகவும் 'ஜம்'மென்று காரில் அமிர்தசரஸ் சென்று சேரலாம்.

அமிர்தசரஸ் செல்லுமுன்பே அந்தப் பஞ்சாப் ராஜ்யத்தில் பிரதான குடிகளாக இருக்கும் சீக்கியரைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாம். கருகருவென்று தாடி வளர்த்துத் தலைப்பாகையுடன் சிங்கம் போல் கம்பீரமாக நடப்பவர்கள் சீக்கியர்கள். அவர்கள் தலைப்பாகைக்குள் ஒரு சீப்பு, ஒரு கத்தி (கிர்பான் என்று பெயர்) இருக்கும். நீண்ட கேசம் உண்டு. இவை தவிர கையில் ஒரு வளையும் அரையில் ஒரு கச்சமும் அணிந்திருப்பர். சீப்பு தூய்மையையும், கிர்பான் ஆன்ம சக்தியையும் கேசம் தியாகத்தையும் குறிக்கின்றனவாம். கைவளை நேர்மையையும், கச்சம் புலனடக்கத்தையும் குறிக்குமாம். இத்தனையும் நிறைந்த ஒரு நல்வாழ்வு வாழ்வதற்காகவே சீக்கிய மதத்தைக் குருநானக் என்பவர் தொடங்கியிருக்கிறார். இந்து மதத்தின் ஒரு பிரிவாகவே இந்தச் சீக்கிய மதம் வளர்ந்திருக்கிறது. குருநானக் பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே பிறந்து வளர்ந்தவர். காசியிலிருந்து மக்கா வரைக்கும் காச்மீரத்திலிருந்து இலங்கை வரைக்கும் பிரயாணம் பண்ணி யிருக்கிறார். சாதி சமய வேறுபாடுகள் பொருளற்றவை என்றும், எல்லோருக்கும் ஈசன் ஒருவனே, அவனை வாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்து அவனருள் பெற்று அவனை அடைவதே மனிதப் பிறவியின் பயன் என்றுதான் அவர் உபதேசித்தார். இத்தகைய மதம் ஒன்றையே நானக்குக்குப் பின் வந்த சீக்கிய குருமார் ஒன்பது பேர்கள் வளர்த்திருக்கிறார்கள். சீக்கியர்கள் நல்ல போர் வீரர்களாகவே வாழ்ந்திருக்கின்றனர். அதனால் இவர்கள் நிறைந்துள்ள பாஞ்சாலம் வீரம் விளைகின்ற நாடு என்று மக்கள் கருதியிருக்கின்றனர். அந்தச் சீக்கியர்களின் முக்கியமான நகரம் தான் அமிர்தசரஸ். அந்த அமிர்தசரஸிலே தான் அவர்களது பிரதான கோயில்—தங்கக் கோயிலாக மிளிர்கிறது. அந்தத் தங்கக் கோயிலைக் காணவே நாம் அமிர்தசரஸ் செல்கிறோம் இன்று.

சீக்கிய மதக் குருக்களில் நான்காவது குரு ராமதாஸர். அவரை மொகலாய மன்னர் அக்பர் மிகவும் மதித்தார். அந்த அக்பர் சக்கரவர்த்தி ராமதாஸருக்கு அளித்த நிலத்திலேதான் 1577ல் இந்த நகரை நிர்மாணித்தார். ராமதாஸர் நிர்மாணித்த நகரம் ஆனதால் முதலில் ராம்தாஸ்பூர் என்றே அழைக்கப்பட்டது. அந்த ராமதாஸர்தான்

அமிர்தக் கடல் என்னும் அமிர்தசரஸை உருவாக்கினார். இந்த ராமதாஸருடைய புதல்வர் அர்ச்சுனர். அவர்தான் இந்த சரஸின் மத்தியில் ஓர் ஆலயத்தைக் கட்டினார். அதற்குச் செப்புத் தகடு வேய்ந்து அதற்குத் தங்க மெருகிட்டார். இன்னும் சொல்லப்போனால் ஹஸரத் ஷேக்மியான் என்ற மகம்மதிய குரு ஒருவரே இக்கோயிலுக்கு அஸ்திவாரம் போட்டுக் கொடுத்திருக்கிறார். இப்படி சீக்கியரும் மகம்மதியரும் ஒன்று சேர்ந்து உருவாக்கிய கோயிலே தங்கக்கோயில். கோயிலைச் சுற்றிச் சீக்கியர்கள் குடியேறி அதைப் பெரிய நகரமாக்கினர்.

இந்தத் தங்கக் கோயில் இன்று அமிர்தசரஸ் நகரத்தின் நடுநாயகமாக விளங்குகிறது. அது கிட்டத்தட்ட 480 சதுர அடி விஸ்தீரணமுடையது. அதைச் சுற்றியிருக்கும் கரையில் நான்கு பக்கங்களிலும் சலவைக் கல் படிகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஏரியின் நடுவிலுள்ள கோயிலுக்குச் செல்லக் கரையிலிருந்து ஒரு பாலம் கட்டப்பட்டிருக்கிறது. அது இருநூறு அடி நீளம் இருக்கிறது. கோயிலைச் சுற்றி ஒரு பிராகார வீதி இருக்கிறது. பாதையெல்லாம் நல்ல சலவைக் கல் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. கோயில் மூன்று அடுக்குகளோடு கூடிய நல்ல சதுர வடிவில் அமைந்தது. கோயிலுக்கு மேல் மணிக்கூண்டு என்னும் விமானம் கம்பீரமாக உயர்ந்திருக்கும். கோயில் வாயிலே வெள்ளிக் கதவு அலங்கரிக்கும், விதானம் பொன் தகடு போர்த்தப்பட்டுப் பளபளவென்று இருக்கும். மேல் மாடியில்தான் குருபீடம் இருக்கிறது. கோயிலைத் தர்பார் சாகிப் ஹரிமந்திர் என்று அழைப்பவர்களே, குருபீடத்தை சீஷ்மஹால் என்று அழைக்கின்றனர். கோயிலின் அடித்தளத்தில்தான் சீக்கியர்களின் வேத புத்தகமான ஆதிக் கிரந்தம் வைக்கப் பட்டிருக்கும். பூசை புனஸ்காரங்கள் அந்தக் கிரந்தத்திற்குத்தான். கோயிலுக்குள் எல்லா மதத்தவரும் செல்லலாம். என்றாலும் சில நியதிகள் உண்டு. முதலில் காலில் பாதரக்ஷை அணிந்து கொள்ளக் கூடாது. தலையைச் சுற்றி ஒரு துணி கட்டியிருக்கவேண்டும்; வெறும் தலையுடன் செல்லக் கூடாது. பீடி சுருட்டுக்களைக் கோயில் பக்கம் பிடிக்கக் கூடாது. உள்ளே செல்லும் அனைவரும் ஆதி கிரந்தத்துக்குத் தலை தாழ்த்தி வணக்கம் செலுத்துதல் வேண்டும். விரும்பினால் அங்கிருந்து கிரந்தத்தைப் பாராயணம் பண்ணுபவர்களுடன் சேர்ந்து பாராயணம் பண்ணலாம். தொழுகை இங்கு நடப்பது போலவே முதல் மாடியிலும் நடக்கும். தரையெல்லாம் சலவைக் கற்கள். அவற்றில் எனாமல் வேலை செய்யப் பட்டிருக்கும். இந்தக் கோயில் அமைப்பில் செலவிடப் பட்டிருக்கும் தங்கம் உலகத்திலேயே வேறு எந்தக் கோயிலிலும் செலவிடப்படவில்லை என்கின்றனர். இங்கு நடக்கும் விழாக்கள் சீக்கிய குருக்கள் பிறந்த நாள் விழாக்கள்தான். ஒவ்வொரு நாளும் கோயிலைச் சுற்றி விளக்குகள் ஏற்றி அலங்கரிக்கிறார்கள். கோயில் தீபாலங்காரத்துடன் அமிர்தசரஸில் பிரதிபலிக்கும் போது அது கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.



தங்கக் கோயில்

அமிர்தசரஸைச் சுற்றியிருக்கும் கட்டடங்களைப் 'பங்கா' என்று அழைக்கின்றனர். இந்த நகரம் பல இடிபாடுகளுக்கும் உள்ளாகியிருக்கிறது. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அகமத் ஷா துரானி என்பவன் இந்நகரை அழித்திருக்கிறான் என்றாலும் சில வருஷங்களில் திரும்பவும் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் ரஞ்சித் என்பவன் 1802ம் வருஷமே தங்கக் கோயிலின் விதானத்துக்குப் பொன் வேய்ந்திருக்கிறான்.

அமிர்தசரஸில் நாம் காண வேண்டியவை இன்னும் சில உண்டு. 'அகால தக்த்' என்னும் கட்டிடம் ஒன்று. அங்குதான் சீக்கிய மத சம்பந்தமான தர்க்கங்கள் நடக்குமாம். இன்னொரு இடம் 'பாபா அடல்' என்பது. சீக்கியக் குருக்களில் ஒருவரான ஹரகோவிந்தரின் புதல்வரான பாபா அடல்ராய் என்பவர் சீக்கிய மதம் நிலைத்து நிற்கத் தம் உயிரையே கொடுத்திருக்கிறார். அவரை அடக்கம் செய்த இடத்திலே ஒன்பது மாடங்கள் கொண்ட கட்டிடம் ஒன்றைக் கட்டி அதனைப் பாபா அடல் என்று அழைத்திருக்கின்றனர்.

இத்தனையும் பார்த்துவிட்டோம் என்றாலும் உடனே திரும்ப முடியாது. இங்குதான் நமது சுதந்திரப் போராட்டத்தில் முக்கிய நிலைக்களனாக அமைந்த ஜாலியன்வாலா பாக் இருக்கிறது. அன்று 1919ம் வருஷத்தில் அந்த இடத்தில் கூடிய இந்திய மக்களைத்தானே ஜெனரல் டயர் என்பவன் ஆயிரக் கணக்கில் சுட்டு வீழ்த்தியிருக்கிறான். அந்த ஜாலியன்வாலாப் படுகொலைதான் மக்கள் சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பியிருக்கிறது. சுதந்திரப் போரில் வெற்றி நடைபோட்டு மக்கள் நடக்கவும் உதவியிருக்கிறது. அங்குள்ள கட்டிடங்களில் குண்டு பாய்ந்த அடையாளம் இன்றும் தெரிகிறது. அங்கு உயிர்நீத்த வீரமக்களுக்கு வணக்கம் செலுத்திவிட்டு அமிர்தசரஸிலிருந்து கிளம்பலாம்.



# கல்யாணங்களில் அத்தை



அனுசூயா

*தனக்குக் கணவனாக வரப் போகிறவனுக்கு அத்தை இருக்கிறளா, இல்லையா என்று கூட ஒரு கலியாணப் பெண்ணுக்கே தெரியவில்லையே, அதைச் சொல்லுங்கள்!*

சத்திரங்களிலும், கல்யாண மண்டபங்களிலும் கூடும் கூட்டத்தில் யார் யாருக்கு என்ன உறவு, யார் அழைக்கப் பட்டவர்கள், யார் வேற்று மனிதர்கள் என்று சுலபமாகக் கண்டுபிடிக்க முடிவதில்லை.

கொஞ்ச நாட்களாக 'அத்தை', அத்தை' என்கிற பெயர் பத்திரிகைகளில் அதிகம் அடிபட்டு வருகிறது. அது போதாதென்று போலீஸ் ஸ்டேஷன்களில் வேறு அடிபடுகிறது. விஷயம் இதுதான்:

சென்னை திருவல்லிக்கேணியில் ஒரு சத்திரத்தில் கல்யாணம் நடந்தது. முகூர்த்த தினத்தன்று விடியற்காலை மணப்பெண் தூங்கி வழிந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள்போல் இருக்கிறது. அப்போது மாப்பிள்ளையின் அத்தை வந்து, ''மசமச வென்று இருக்காதே. சீக்கிரம் போய் ஸ்நானம் செய்து விட்டு வா. நான் நகைகளைப் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கூறி விரட்டி விட்டாள். பெண் ஸ்நானம் செய்து விட்டு வந்து பார்த்த போது அத்தையைக் காணும். சல்லடை, இல்லடை எல்லாம் போட்டுச் சலித்துப் பார்த்தார்கள். அப்படியும் அவள் அகப்படவில்லை. அப்புறந்தான் பிள்ளைக்கு அத்தை இல்லை என்று தெரிய வந்தது. போலீஸில் புகார் செய்தார்கள்.

போலீஸ்காரர்கள் அவளை நகையுடன் பிடித்து விட்டார்கள். அவள் பல கல்யாணங்களில் பிள்ளைக்கோ, பெண்ணுக்கோ அத்தையாயிருந்து வந்திருக்கிறள். அங்கெல்லாம் கலியாணப் பெண்ணுக்கும், மற்றவர்களுக்கும் நகை பாரம் இல்லாமற் செய்து வந்திருக்கிறள். அவள் 'பெரிய மனுஷி' போலிருக்கிறது. வைரக் கம்மல், இருபது பவுன் ஒட்டியாணம் இது போன்ற நகைகளாகத்தான் எடுத்துக் கொண்டு அந்தர்த் தியானமாவது வழக்கம்.




நகர நாகரிகம் இதற்கெல்லாம் இடம் தருகிறது. சில பெரிய மனிதர்கள் வீட்டுக் கலியாணங்களில் ஐம்பதுக்காக டெலிபோன் டைரக்டரியைப் பிரித்து வைத்துக் கொண்டு ஆயிரக்கணக்கான அழைப்பிதழ்களை அனுப்புவார்கள். பாதிப் பேருக்குமேல் இன்னுரென்று தெரியாது. கச்சேரிக்குக் கூட்டம் வந்தால் சரி!

ஹோட்டலில் சாப்பாட்டு விலை ஏறி விட்டதே, கையில் காசில்லையே என்று கல்யாண சீசனில் யாரும் சென்னையில் கவலைப்பட வேண்டாம். வண்ணானுக்குப் போய் வந்த கிழியாத சட்டை புருஷர்களுக்கு இருந்தால் போதும் என்கிற நிலை! புன்முறுவலுடன் ஒரு நமஸ்காரத்தையும் போட்டு விட்டு உள்ளே போய் விடலாம். இருந்தாலும், யார் யாருக்கு என்ன உறவு, யார் அழைக்கப் பட்டவர்கள், யார் வேற்று மனிதர்கள் என்று கண்டுபிடிக்க முடிவதில்லை.

கல்யாணம் சம்பந்தப்பட்ட முக்கியமான பேரையாவது எல்லோரும் தெரிந்து கொள்ள ஓர் ஏற்பாடு செய்தால் நல்லது. எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. சொல்லட்டுமா?

தபாலாபீஸ்கள், பாங்குகள் முதலியவற்றில் 'ஜேப்படிக்காரர்கள்-ஜாக்கிரதை' என்று ஓர் அட்டை தொங்கும். அதில் அவர்களுடைய புகைப்படங்கள் இருக்கும்.

அதே மாதிரி 'உறவுக்காரர்கள் — ஜாக்கிரதை' என்று போட்டு முக்கியமான, உறவினர்களின் புகைப்படங்களை ஒட்டி வைக்கலாம். மாமனுர்கள், மாமியார்கள், மைத்துனர்கள், நாத்தனுர்கள், அவர்கள் கணவன்மார், அத்தைகள், அவர்களுடைய புருஷன்மார் முதலியவர்களுடைய படங்கள் இருக்கவேண்டியது அத்தியாவசியம்.

இந்த அட்டையிலிருந்து யார் யார் என்ன உறவு என்று சந்தேகத்துக்கிடமில்லாமல் தெரிந்து கொண்டு விடலாம். பெண் தன் நகையைப் பிள்ளைக்கு அத்தையினிடமோ அவனது சகோதரியினிடமோ ஒப்படைக்கு முன் அவள் படம் அட்டையிலிருக்கிறதா, அவள் அவளேதானு என்று பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். பெண் யார் யாருக்கு நமஸ்காரம் செய்தாக வேண்டும் என்று தெரிந்து கொள்ளவும் இந்தப் படங்கள் மிகவும் உதவியாயிருக்கும்.

பிள்ளை வீட்டுக்காரர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும். அவர்களை உபசரிக்க வேண்டும், உபசரிக்க வேண்டும், உபசரித்துக் கொண்டேயிருக்க வேண்டுமல்லவா? அதற்காகத்தான் 'ஜாக்கிரதை' என்ற வார்த்தை.

கல்யாண தினத்தன்று பெண்ணுடைய அப்பா ஒரு மனுஷராகவே இருப்பதில்லை. ஒரு புது வேஷ்டியைக் கட்டிக் கொண்டு அங்கு மிங்கும் போய்க் கொண்டிருப்பார். எதற்காக, எங்கே போகிறேம் என்று அவருக்கே தெரியாது. அடிக்கடி அசட்டுச் சிரிப்பு சிரிப்பார். எதைப் பற்றியும் ஏதாவது சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசி வைப்பார். தமாஷாகப் பேசுவதாக நினைத்துக் கொண்டு ஏதாவது உளறி வைப்பார். பெண் கழுத்தில் தாலி ஏறிய பிறகு சிறு பையனைப் போல் பந்தக்காலைப்

பிடித்துக் கொண்டு நிற்பார். "நாம் நமது பெண்ணுக்குக் கலியாணம் பண்ணியே விட்டோம்!" என்ற விடுதலை உணர்ச்சி பெருமை உணர்ச்சியால் அப்படி விருப்பார்.

பெண்ணுக்கு அம்மா. அவளுக்கு எல்லாவற்றையும் தானே நேரில் கவனித்து, தானே செய்ய வேண்டுமென்கிறது. முடிவதில்லை. ஒரு பக்கம் பிள்ளை வீட்டாரின் கோபம், இன்னொருபக்கம் தனது பந்துக்களின் கோபம். பெண்ணை விட்டுப் பிரிந்து விடப் போகிறோமே என்ற வருத்தம். இந்தச் சமயம் பார்த்துப் பெண்ணுக்கும் திடீரென்று அம்மாவைப் பற்றி அளவுக்கு மீறிய கரிசனம் ஏற்படும். ஒருவரை யொருவர் பார்க்கும் போதெல்லாம் இருவருமே கண்ணின் கோடியைத் துடைத்து விட்டுக் கொள்வார்கள். இந்த நிலைமையில் அம்மாவின் கண்களில் வந்திருப்பவர்கள் எல்லாரும் படுவதில்லை. சிலரை மட்டுமே பார்த்து உபசரிப்பாள். முடிவு: மனஸ்தாபங்கள்.

இப்படியாகக் கல்யாணப் பெண்ணுக்கு அப்பாவும், அம்மாவும் அரைப் பைத்திய நிலைமையில் இருக்கும்போது விஷயங்களை யார் கவனிப்பது ?

இதோ ஸ்ரீமதி அ...த்...தை....! அந்த அத்தை பத்து நாட்களுக்கு முன்னால் வந்தாலும் 'காம்ப்' போட்டுவிட்டாள் என்று அவள் அருமை மன்னி சொல்லுவாள். கல்யாணத்திற்கு முதல் நாள் வந்தாலும், "யாரோ மாதிரி வருகிறாள்" என்று சொல்லி வைப்பாள். ஆகையால் அந்த அத்தை மூன்று, நான்கு நாட்கள் முன்னதாக வருவாள்.

அந்த இரண்டு மூன்று தினங்களில் கல்யாணத்தைப் பற்றிய ஏற்பாடுகள், செலவுகள் எல்லாம் அவளுக்கு அத்துப்படி ஆகிவிடும். ஓரளவு அனுபவமுள்ளவளா யிருந்தால் கல்யாணத்தின் போக்கு எப்படி இருக்கும் என்று நிர்ணயித்துக் கொண்டு விடுவாள்.

கல்யாணப் பெண்ணுக்கு மருதாணி இடுவாள். தலை வாரிப் பின்னி விட்டுப் புடவை கட்டிக் கொள்ள உதவி செய்வாள். நகைகளைப் போட்டு விட்டு, பிறகு கழற்றி வாங்கி வைத்துக் கொள்வாள். பெண்ணை வேளாவேளையில் சாப்பிடச் செய்வது போன்ற பல பொறுப்புக்கள் அவளுக்கு உண்டு.



சில சமயம் பெண்ணின் அப்பாவும், அம்மாவும் ஒரு பீரோவுக்குப் பின்பக்கத்தில் நின்று கொண்டு சண்டை போட்டுக்கொண்டிருப்பார்கள். "வேண்டாம் என்று தலையில் அடித்துக்கொண்டேன். கேட்டீர்களோ? மாமியார் ராட்சஸியாக இருக்கிறாளே?" என்பது போன்ற பேச்சு காதில் விழும். அத்தை தலையிட்டு அவர்களுக்குள் சமாதானம் செய்து வைப்பாள்.

அத்தை, மேக்கப் செய்பவள், கல்யாணப் பெண்ணுக்குத் தோழி, 'கார்டு' எல்லாம். பிள்ளை வீட்டாரைக் கவனித்துக் கொள்பவளும் அவளே. பெண் வீட்டார் பிள்ளை வீட்டார் இருவருக்கு மிடையில் அவள் ஒரு சமரச உத்தியோகஸ்தர்.



உறவினர்களுள் பெண்ணின் அத்தை ஒருத்திதான் கவலையின்றி நிதானமாக இருப்பவள். அவளுக்குப் பணச் செலவைப் பற்றிய பொறுப்பில்லை. பெண்ணை விட்டுப் பிரியப் போகிறோமே என்ற கவலையில்லை. அதே சமயத்தில் ஓரளவு அதிகாரம் இருக்கிறது. ஆகையினால், அவளால் நிதானமாக எதையும் செய்ய முடிகிறது போலும்.

ஒரு கல்யாணச் சாக்கில் சர்வ காரிய மேஸ்திரியா யிருக்கும் பெண்ணின் அத்தையின் அருமை, பெருமைகளைப் பற்றி யாரும் பேசிக் கொள்வதில்லை. அதனால் நான் எடுத்துச் சொல்ல வேண்டியதாயிற்று.

நான் ஓர் அத்தையாகவே பிறந்தேன்!

## வெறும் அரட்டை

"அரசியலில் இப்போதெல்லாம் சமையலும் புகுந்திண்டிருக்கே, கேள்விப்பட்டேளா மாமி?"

"ஆமாம், அப்பளாம் தயார் பண்ணி அதை விற்க வழியில்லாமே நம்ப தமிழக அரசாங்கம் அந்தத் தொழிலுக்கு முழுக்குப் போட்டுடுத்தாம்."

"முன்னே கிருஷ்ணமேனன் இருந்தப்போ பாதுகாப்பு இலாகாவிலே காப்பி மிஷின் தயார் பண்ண ஆரம்பிக்க அதனாலே ஏகமா நஷ்டமாச்சு."

"பஞ்சாபிலே மட்டுமென்ன? சப்பாத்தி தயார் பண்ணற மிஷின்களைச் சர்க்கார் கிராமப் புறங்களிலே யெல்லாம் நிறுவ ஆரம்பிச்சு அப்புறம் அது பெரிய தோல்வியிலே முடிஞ்சுது. காலணுவுக்குப் பிரயோஜன மில்லையாம் அந்த இயந்திரங்கள்."

"சர்க்கார் துறையிலே உருப்படியா இயங்கும் மிஷின் நோட்டு அச்சடிக்கிற மிஷின் தான்போலிருக்கு!"

"பிரிட்டனிலே கேக் தயார் பண்ண மிஷின் கண்டு பிடிச்சிருக்காளாம். ஆறுபேர் அதை இயக்கினால் போதுமாம்; ஒரு மணி நேரத்தில் ஆயிரம் கேக்குகளை வாய்க்கு ருசியாகப் பண்ணித் தள்ளறதாம்! முறுக்கு தயாரிக்க அப்படி ஒரு மிஷின் யாராவது கண்டுபிடிக்கக் கூடாதோ?"

"கை முறுக்குக்கு ஈடாகுமா? மணமும் அது அலாதிதான், இல்லையா?"

# ஒரு பெண்ண

எம்.வி.வெங்கட்ராம்

திங்கட்கிழமை ரகுவுக்கு நிர்மலாவிடமிருந்து கடிதம் வந்தது; அன்றிலிருந்து இன்று — வியாழன் — வரை அவன் மிகவும் முன் எச்சரிக்கையாக, அவளைச் சந்திப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தான்.

ஏற்பாடுகள் சுலுவாகவா இருந்தன?

அவனிடம் இருந்தது ஒரே ஒரு எட்டு முழம் வேட்டி; அதையும் இருப்பவைகளில் நல்லதாக ஒரு சட்டையையும் நன்றாகத் துவைத்துக் குருவி நீலம் கரைத்த கஞ்சி நீரில் அலசிக் காய வைத்து, நண்பன் ஒருவனிடம் மன்றாடி அவைகளை 'இஸ்திரி' செய்து முடித்தபோது திங்கள் போய் விட்டது. ஆள் பாதி, ஆடை பாதி என்பார்கள்; நிர்மலாவுக்கு எதிரில் அழுக்கும் கந்தலுமாகப் போகலாமா?

அல்லது, ஐந்து நாள் தாடியுடன் பக்கிரி போல்தான் போக முடியுமா? இந்து காசுகளைச் சேமித்து, 'பிளேட்' ஒன்றை வாங்கி வைத்துக் கொள்வதற்குள் செவ்வாய் போய் விட்டது. வியாழனை எதிர்பார்ப்பதில் புதன் கழிந்தது. இன்று காலையில், முகத்தைச் சுத்தம் செய்து கொண்டு — கண்ணாடியில் முகத்தைப் பார்த்த போது — அவன் முகத்தைப் பார்க்கவும் தெம்பில்லாத குருட்டுக் கண்ணாடி அது. 'ஆறணாவுக்கு ஒரு கண்ணாடி வாங்கக்கூட நமக்கு வக்கு இல்லாமல் போய்விட்டது. சே, நல்ல பிழைப்பு!' என்று முணுமுணுத்துக் கொண்டான். 'நிர்மலாவினால் இந்தத் துன்பங்களுக்கு எல்லாம் ஒரு முடிவு காணலாம்' என்ற எண்ணம் அவனுக்கு ஆறுதல் அளித்தது.

நல்ல பாட்டுப் போல் மனப்பாடம் ஆகிவிட்ட அவள் கடிதத்தை ஆயிரந்து எட்டாவது முறையாகப் படித்தான் :

''அன்புள்ள,

ரயில் பாதையருகில், நாம் முன்பு வழக்கமாய்ச் சந்தித்த ஆலமரத்தடியில் வியாழக்கிழமை மாலை



ஐந்து மணிக்குத் தங்களுக்காகக் காத்திருப்பேன். நிர்மலா.''

இரண்டு ஆண்டுகளுக்குப் பின் அவனைக் காண வருகிறவள், இந்த நீண்ட பிரிவின் துயரத்தையெல்லாம் கொட்டி நீளநீளமாய்க் கடிதம் எழுதக் கூடாதா? எல்லாவற்றையும் நேரில் தன் வாயால் சொல்ல வேண்டும் என்பதற்காக அவள் ரத்தினச் சுருக்கமாக எழுதியிருக்கிறாள்; சளசளவென்று அவளுக்குப் பேசவோ எழுதவோ தெரியாது. நல்ல செய்தி சொல்லத்தான் அவனைச் சந்திக்க வருகிறாள்.

அதை எப்படி அவ்வளவு நிச்சயமாக எதிர்பார்க்க முடியும்? நல்ல செய்தி என்று கடிதத்தில் ஒரு வரி. அந்தத் தொனி கொடுக்கும்படியாகவாவது எழுதியிருக்க மாட்டாளா? அவன் ஆசை நிராசையாகி, அந்தத் துயரத்தை அவனோடு பகிர்ந்து கொள்ளத்தான் வருகிறாளோ என்னவோ?

அப்படி இருக்க முடியாது. தீய செய்தியாக இருந்தால், வரவே மாட்டாள். தனிமைக்கு அவனை அவள் அழைப்பதன் நோக்கம், அவள் நம்பிக்கை பலித்து அவனோடு உல்லாசமாக இருக்க வேண்டும் என்கிற ஆர்வமாகத்தான் இருக்க வேண்டும்.

'நிர்மலாவோடு புது வாழ்வு ஆரம்பம் ஆகும். அம்மாவின் கஷ்டங்கள் தீர்ந்து போகும். அந்த நல்ல நேரத்தின் வருகையைத்தான் நிர்மலாவின் கடிதம் அறிவிக்கிறது.'

''ரகு! இன்றைக்கு யாரையோ பேட்டி காணப் போகிறேன் என்றாயே?'' என்று அம்மா அவன் சிந்தனையைக் கலைத்தாள்.

அவன் அம்மாவிடம் நிர்மலாவின் கடிதம் பற்றி ஒன்றும் கூறவில்லை. ரகசியம் என்பதால் அல்ல. நிர்மலாவுக்கும் அவனுக்கும் உள்ள பந்தம் அம்மாவுக்குத் தெரியும். அந்தப் பிணைப்பு கலியாணமாக உருவெடுக்கும் என்ற நம்பிக்கை அவளுக்கு என்றும் இருந்ததில்லை. ஆகையால் அவள் அவனை எச்சரித்துக் கண்டித்தும் வந்தாள். நிர்மலா தன் பெற்றோருடன் ஊரை விட்டுச் சென்று, இரண்டு ஆண்டுகளும் கழிந்தவுடன் அவள் அந்த விஷயத்தை மறந்தே போனாள். நிர்மலாவைச் சந்தித்துப் பேசிய பிறகு, அந்த நல்ல செய்தியைத் தெரிவித்து அம்மாவைத் திடுக்கிட வைக்க வேண்டும் என்பது அவன் எண்ணம்; அதனால்தான் வியாழக்கிழமை ஐந்து மணிக்கு வேலைக்காகப் பேட்டி என்று அவளிடம் பொய் சொல்லி வைத்தான்.

''ஆமாம், அம்மா. இந்த வேலை கட்டாயம் கிடைக்கும். உன் கஷ்டத்துக்கு எல்லாம் விமோசனம் பிறக்கும் என்று தோன்றுகிறது. ராகு காலம் கழிந்ததும் புறப்படுகிறேன். காலையில்தான் ஒன்றும் செய்யவில்லை. மத்தியானத்துக்காக என்னவோ செய்து கொண்டிருந்தாயே!''

''நான் என்னடா செய்வேன்? எதிர்வீட்டு அம்புஜத்தைத்தான் தொந்தரவு செய்தேன். அவளும் பிள்ளைகுட்டிக்காரி. நாலு குழந்தைகளை வைத்துக் கொண்டு நூறு ரூபாய் சம்பளத்தில் எப்படியோ ஒப்பேற்றுகிறாள். முந்தி வாங்கிய எட்டு ரூபாயும் கொடுத்தபாடில்லை. அவளிடம் நாலணா இருந்தது. கொடுத்தாள். நீ பேட்டிக்குப் போக வேணும் என்றாயே. சோறு என்று ஏதோ ஆக்கி வைத்திருக்கிறேன். முதலில் நீ வேலை தேடிக் கொள். என்னால் இந்தக் கஷ்டத்தைத் தாங்க முடியவில்லை.''

அவள் கண்கள் கனிவதைக் கண்டு அவன் குறுக்கிட்டான்: ''அம்மா! நான் காரியமாக வெளியில் புறப்படும் போது நீ அழுது கொண்டிருந்தால், என் மனசும் கெட்டுப் போகும். இன்று வேலை ஆகும் என்று ஏதோ ஒரு நம்பிக்கை.''

''எப்படியோ அந்த மங்களாம்பிகை கண் திறந்து பார்த்தால் சரி'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டாள் தாயார்.

''நீ சாப்பிடவில்லையா அம்மா?''

''சாப்பிட்டு விட்டேன். இருக்கிறதைச் சாப்பிட்டு நீ தெம்பாகப் போய் வேலையை முடித்துக் கொண்டு வா.''

அவள் பொய் சொல்லுகிறாள் என்று அவனுக்குத் தெரியும். வேறு சமயமானால் இருந்த சோற்றை அவளோடு பகிர்ந்துகொண்டிருப்பான். ஆனால் இன்று நிர்மலாவைச் சந்திக்கப் போகும்போது, சற்றாவது தெளிவாகப் பேச வேண்டாமா? இந்த மூன்று நாட்களாய் அவர்களுக்கு மூன்று வேளை ஆகாரம்தான்; மூன்று வேளையும், அரை வயிற்றுக்குத்தான்.

மனசைத் திடப்படுத்திக் கொண்டு சாப்பிட்டான். வயிற்றுக்குள் சயம் புகுவதுபோல் சோறு மறைந்தது. நல்ல வேளை, தண்ணீர் காசில்லாமல் கிடைக்கிறது: வயிறு நிறையக் கொட்டிக் கொண்டு எழுந்தான். சேலைத் தலைப்பை விரித்து, சுருண்டு கிடந்த தாயாரைப் பார்த்தபோது அவனுக்கு ஒரு மாதிரியாகத்தான் இருந்தது.

கீழ்வானில் மேகங்களுக்கு இடையில் தலைதூக்கும் சூரியனைப் போல் நிர்மலாவின் முகம் அவன் மனத்தில் உதித்தது. அவளை அவன் சந்தித்தது, அவர்களுக்கு இடையில் நட்பு உருவானது, தங்கள் காதலைக் கலியாணமாக முடிப்பது என இருவரும் உறுதி செய்து கொண்டது — எல்லாம் அவனுக்கு ஞாபகம் வந்தன. அம்மாவைப்போல் அவனுக்கும் அவளுடைய அந்தஸ்து பற்றிய அச்சம் இருந்தது. அவளை ஒதுக்கத்தான் முயன்றான்; அவனால் ஒதுங்க முடியவில்லை. அவன் எதிர்பார்த்ததைப் போலவே, அவளுடைய பணக்காரத் தந்தை அவர்கள் காதலில் மண் போட முனைந்தார். அவளைக் கட்டுப்படுத்த முடியாது என்று கண்ட அவர் குடும்பத்தோடு சென்னைக்குக் குடியேறினார்.

கடைசியாகச் சந்தித்தபோது அவள் கூறிய வார்த்தைகளை அவனால் மறக்க முடியாது: ''அப்பா சீமைக்குப் போனாலும் சரி, நான் மாற மாட்டேன். கடிதம் எழுதுகிறேனோ இல்லையோ, நீங்கள் காத்திருக்க வேண்டும். நான் கட்டாயம் உங்களைத் தேடி வருவேன்'' என்றாள் அவள்.

காத்திருப்பதாக அவனும் வாக்களித்தான். காத்தும் இருக்கிறான்.

''சொன்னபடி அவள் என்னைத் தேடி வருகிறாள். தகப்பனாரை அவள் வழிக்குத் திருப்பிய செய்தி சொல்லத்தான் வருகிறாள்.

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட் -

## கார் சவாரியில்
## ஒரு புது அனுபவம்



## கீழ்க்கண்ட போற்றத்தக்க
## வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ஸ்தாயில் கல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கிலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- ஃகு கர்டரிலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## உறுதியான, எழில் மிகுந்த கார்




*தயாரிப்பாளர்கள் :*

**ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்**
**சென்னை. 2**

*வினியோகஸ்தர்கள் :*

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்
சென்னை — உதகை
யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்

இவ்வளவு காலமாய், கடிதம்கூட எழுதாமல், திடீரென்று அவன் வருவதன் பொருள் வேறு என்ன ?''

ஒரு பெருமூச்சு, அவன் நெஞ்சின் இறுக்கத்தைச் சற்றுத் தளர்த்தியது.

''இன்னும் ராகு காலம் போகவில்லையா, ரகு ?''

''அடுத்த வீட்டுக்குப் போய் மணி பார்த்து வாயேன்.''

திரும்பி வந்து அம்மா சொன்னான்: ''இரண்டே முக்கால் ஆகிறது. நீ தயார் செய்து கொள்வதற்குள் மூன்று ஆகிவிடும்.''

அம்மா உட்கார்ந்தவள், சுவரோடு சாய்ந்து கொண்டதை அவன் கவனித்தான். கவனியாதவன் போல் உடைகளை மாற்றிக் கொண்டான்.

''கேட்கிற கேள்விகளுக்கு எல்லாம் பதற்றம் இல்லாமல் நிதானமாகப் பதில் சொல்லு. சந்தோஷமாகப் போய் வேலையை முடித்துக் கொண்டு வா'' என்று வாழ்த்து கிறவள் போல் பேசினாள் அம்மா.

''உன் கையால் ஒரு தம்ளர் தண்ணீர்—''

கேட்ட பிறகு 'ஏன் கேட்டோம்' என்று அவனுக்கு விசனமாக இருந்தது: அவள் மெதுவாக எழுந்து, கொண்டு வந்து கொடுத்தாள். முகமலர்ச்சியை இருவரும் கட்டாயப் படுத்தி வரவழைத்துக் கொண்டனர். தண்ணீர் பருகியதும், அவளையும் அறியாமல் அவள் கால்களில் விழுந்து வணங்கினான்.

''மங்களாம்பிகை காப்பாற்றுவாள், தைரியமாகப் போய் வா.''

''வருகிறேன் அம்மா!''

வெயில் நெருப்பாக எரித்தது. தெரு நடமாட்டம் அற்று வெறிச்சோடிக் கிடந்தது. செருப்பும் குடையும் இருந்தால் —

இருந்தால் நல்லதுதான்; சைக்கிள் இருந்தால் இன்னும் நல்லது; அதற்கு மேலும் ஆசைப்படலாம்; கார் ஒன்று இருந்தால்—

நிர்மலாவின் கரம் பற்றினால், இந்த ஆசைக் கனவுகளெல்லாம் எளிதில் நனவாக வேண்டியவைதானே? அவன் குறிப்பிட்ட இடத்தை அடைய அவன் இரண்டு மைல்கள் நடந்தாக வேண்டும்.

அவனைக் கண்டதும் நிர்மலா என்ன கூறுவாள்? வாடி வதங்கியுள்ள அவனைப் பார்த்தால் என்ன நினைப்பாள்? அவன் ஏழை என்பதை அவள் அறிவாள்; ஆனால், அவளைச் சந்திப்பதற்காக அவன் தாயை முழுப் பட்டினி போட்டு விட்டு, அவன் முக்கால் பட்டினியாக வருகிற அளவுக்கு அவன் கையால் ஆகாதவன் என்று அவளுக்குத் தெரியாது. அவனுடைய இந்த இழி நிலையை அவள் அறியக் கூடாது. அவள் அவனை மணக்க முன்வந்தாலும், அவன் ஒரு வேலை தேடிக்கொண்ட பிறகுதான் அவளை மணம் புரிய வேண்டும். நிர்மலா உயர்ந்தவள் தான்; ஆனால் தாழ்ந்தவனாக அவன் அவளை அணுகுவது தவறு.

''ரகுவா, நல்ல வெயிலில் எங்கே கிளம்பினாய் ?''

குரல் கொடுத்தவன் சைக்கிளில் இறங்கினான்; ரகுவின் நண்பன் கோவிந்தன்.

நண்பனாவது. ஏழைக்கு நண்பர் என்றும் உதவுகிறவர்கள் என்றும் யாராவது இருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை.

''ட. பீ.யில் ஒருவரைப் பார்க்கப் போகிறேன்.''

''ஏதாவது உத்தியோகமோ?''

''ஆமாம்'' என்ற ரகுவுக்கு ஒரு யோசனை எழுந்தது. கோவிந்தனிடம் ஓர் எட்டணா வாங்கினால் ஹோட்டலில் வயிறாரச் சாப்பிட்டு விட்டுப் போகலாம் அல்லவா? ''கோவிந்து.

## சில சரக்கு

√ காலஞ்சென்ற மெரிலின் மன்ரோவின் மூன்றாவது கணவரும் இலக்கிய கர்த்தாவுமான ஆர்தர் மில்லர் சமீபத்தில் ஒரு நாடகம் எழுதியுள்ளார். அதில் தமது இரண்டாவது மனைவியாகிய மெரிலின் மன்ரோவைப் பற்றிய, உலகுக்கெல்லாம் தெரிந்த சில அந்தரங்க விஷயங்களை, வெளியிட்டிருப்பது ரசனையா



அல்லது . ரசக் குறைவா என்பது பற்றி அமெரிக்காவில் பலத்த வாதப் பிரதி வாதங்கள் நடந்து கொண்டிருக்கின்றன இப்போது. நாடகத்தில் மில்லர் தம்மைத் தாமே தாக்கிக்கொள்கிறார். பார்பரா லோடன் என்ற புதுமுகம் மெரிலின் மன்ரோவைப் போலவே தோற்றமளித்து நடிக்கவும் செய்கிறார். மேடையில், மாற்று நடிகர்கள் மாற்றுப் பெயர்களில் தோன்றினாலும் யார் எவர் என்று பார்வையாளர்களால் எளிதில் கண்டுபிடித்து விட முடிகிறது. கடந்த காலத்தில் எத்தனையோ இலக்கிய மேதைகள் தங்களையும் தங்களைச் சுற்றியுள்ளோரையும் வைத்துக் கதை பின்னியிருக்கிறார்களே என்று சுட்டிக் காட்டுகிறார் மில்லர்.

√ கிழக்கு ஜெர்மனியில் இரும்புத் திரைக்கு அப்பால் உள்ள சரித்திரப் பிரசித்தி பெற்ற கோட்டைகளை மேற்கு ஜெர்மானியர் சுலபத்தில் சென்று பார்க்க முடிவதில்லை. ஆகவே மேற்கு ஜெர்மானிய நகரமாகிய மினிடோமில் சரித்திரப் புகழ் பெற்ற எல்லா ஜெர்மானிய கோட்டைகள், கட்டிடங்களின் மாதிரிகளையும் சிறிய அளவில் கலை நுணுக்கம் கொஞ்சமும் மாறாத வகையில் அமைத்து வருகிறார்கள். சரித்திர காலத்திய நினைவுச் சின்னங்களைக் காண இனி ஜெர்மானியர் ஊர் ஊராகத் திரியவேண்டாம்; ஒரே ஒரு ஊருக்குப் போனால் போதும்!

எட்டணா சில்லறை இருக்குமா? அடுத்த வாரம் தருகிறேன்.''

வெயிலால் வாடாத நண்பனின் முகம் அந்தச் சொற்களைக் கேட்டதும் கண்டியது.

''அடப் பாவமே, இல்லையே அப்பா!'' நழுவினான் கோவிந்தன்.

அவனிடம் எட்டணாவா இராது? கொடுக்க மனம்தான் இல்லை. இந்தச் சமயத்தில் எட்டணா அவனுக்கு எவ்வளவு உபகாரமாக இருக்கும்!

'ஹோட்டலில் சாப்பிட்டு' என்ற நினைப்பே அவன் வயிற்றை முள்ளாய்க் குத்திக் கிளப்பி விட்டது. வயிற்றுக்குள் அப்படி என்னதான் இருக்கிறது? யாரோ உள்ளே குந்தி முனகிக் கொண்டே இருப்பதாகத் தோன்றியது. அப்பால் வயிற்றுக்குள் நெருப்பு மூட்டுவது போல் சுட்டது. நரம்புகளையெல்லாம் முறுக்கி விட்டது போல் உடம்பு முழுவதும் வலித்தது. வாய், பாலைவனம் போல் நீரற்ற பிரதேசம் ஆகி விட்டது. நாக்கு நீர் தேடித் தவித்தது.

தெரு ஓரங்களில் இருந்த வெற்றிலை பாக்குக் கடைகளில் சோடா, ஆரஞ்சு, சர்பத் முதலியவை அழகான பாட்டில்களில் கவர்ச்சிகரமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஏதாவது ஒரு கடையில் ஒரு 'கிளாஸ்' தண்ணீர் கேட்டுச் சாப்பிடலாம் என்று நினைத்தான். இரண்டு காசுக்கு வெற்றிலைகூட வாங்காமல் தண்ணீர் மட்டும் கேட்க அவனுக்கு நாணமாக இருந்தது. நீர்ச் சத்து இல்லாத நாக்கை உறிஞ்சி, தொண்டை வலித்தது. 'இனி பொறுக்க முடியாது' என்ற எல்லை தொட்ட பிறகு, ஒரு கடையில் துணிந்து தண்ணீர் கேட்டான். ஏகு பயந்தது போல் கடைக்காரன் அவனை விரட்டிவிட வில்லை; பேசாமல், ஒரு கிளாஸில் தண்ணீர் கொடுத்தான். தாகம் முழுசாக அடங்கா விட்டாலும், சிறிது ஆறுதலாக இருந்தது. மறுபடியும் நிழல் தேடி நடக்கத் தொடங்கினான்.

நிர்மலாவைத் தவிர, வேறு எதைப் பற்றி அவனால் இப்போது நினைக்க முடியும்?

அவளிடம் அவன் ஏன் ஒளிவு மறைவாக நடக்க வேண்டும்? தன்னுடைய உண்மையான நிலைமையைத் தெரிவித்து, அவளிடம் உதவி கேட்டால் என்ன?

'அது கேவலம்' என்று ஒரு முறை தோன்றியது.

'அவளிடம் மறைப்பதுதான் கேவலம்' என்று ஒரு முறை தோன்றியது.

இந்தச் சமயத்தில் அவனுடைய முழுக் கவனத்தையும் வயிறு கோரியது.

எப்படியாவது நிர்மலா குறித்த இடத்துக்குச் சென்று விட வேண்டும் என்று கால்களை எட்டியே வைத்தான். ரயில்வே ஸ்டேஷனைக் கடக்கும்போது மணி நாலு. ரயில் குறித்த காலத்தில் வருமா என்று விசாரிக்க விரும்பினான். ஆலமரத்தடிக்குச் சென்று களையாற வேண்டும் என்றும் ஆவல் மிகுதியாக, அவன் மேலும் விரைவாக நடந்தான்.

அந்த ஆலமரத்தடியை அடைந்தபோது தான் — இவ்வளவு தூரம் நடந்து வந்ததே ஒரு சாகஸம் என்று தோன்றியது. வயிற்று நரம்புகள் வக்கிரமாகப் புடைத்துக் கொண்டன; தோள்கள் மீது ஒரு பெரும் மூட்டை இருப்பது போலத் தோன்றியது. கால்கள் மரத்தன. முதுகுத் தண்டு நுனியில், மூலாதாரத்தில் கொதிப்பு உண்டாயிற்று. மரத்தின் மீது சாய்ந்தவாறே கால்களை நீட்டினான். சொல்லி முடியாத சோர்வுடன் கண்களை மூடினான்.

''நான் வந்ததைக்கூட நீங்கள் கவனிக்கவில்லையே?'' என்ற குரல் அவனை ஆகாசத்துக்குத் தூக்கியிருக்க வேண்டும். துள்ளி எழுந்திருக்க விரும்பிய அவனால், சிரமத்துடன் நிமிரத்தான் முடிந்தது.

''வந்து விட்டாயா?'' என்று அவன் கேட்ட கேள்வி, வாயை விட்டு வெளியே வருவதற்குப் பதிலாக வயிற்றுக்குள்ளேயே குதிப்பதை அவன் உணர்ந்தான்.

''நீங்கள் வருவதைப் பார்த்துத்தான் மரத்துக்குப் பின்னால் ஒளிந்து கொண்டேன்'' என்றாள் நிர்மலா.

அவள் பேசியதை அவன் கேட்டான். அவன் பதிலைத் தயாரிப்பதற்குள், தலைக்குள் சிங்கங்கள் உறுமின; காதுகளில் வண்டுகள் ரீங்காரம் செய்யும் ஒலி; பேச அஞ்சிய நாக்கு மேலண்ணத்தோடு ஒட்டிக் கொண்டது. கண்கள் அவளைப் புரிந்து கொள்ளத் தவித்தன.

''உங்களுக்கு என்ன உடம்பு? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?'' என்று பதைத்தவாறு அவனுடைய இரண்டு கைகளையும் கெட்டியாகப் பற்றிக் கொண்டாள் நிர்மலா.

அந்த ஸ்பரிசம் அவனுக்குச் சற்றுத் தெம்பு அளித்தது. இவ்வளவு உரிமையுடன் அவளைத் தீண்டுவதால் அவள் கூற வந்தது நல்ல செய்திதான் என்பதை ஊகித்துக் கொண்டான். தன் உடம்பிலும் மனத்திலும் உள்ள சக்திகளை யெல்லாம் திரட்டிப் பேச முனைந்தான்: ''அப்பா ஒப்புக் கொண்டாரா?''

''ஒப்புக் கொள்ளாமல் எங்கே போவார்? கடைசிவரை முடிவு சொல்லாமல் உங்களைத் திணற வைக்க வேண்டும் என்று வந்தேன்; நீங்கள் ஏன் இப்படி இருக்கிறீர்கள்?..... என்ன பார்க்கிறீர்கள்?''

மூளை அவனைக் கைவிட்டது; இருதயம் அவனைக் கைவிட்டது; கைகால்களும் அவனைக் கைவிட்டன. வெறும் வயிறாகவே அவன் மாறிப் போனான்.

''அந்தத் தோடுகள் வைரம்தானே?''

''வைரம்தான். ஏன்?''

''என்ன பெறும்?''

''மூவாயிரம் ஆகும்.''

''மூவாயிரமா? நூற்றைம்பது மூட்டை நெல் வாங்கலாம். ஒரு வருஷம் என்ன, இரண்டு வருஷங்கள்கூட நிம்மதியாகச் சாப்பிடலாம்.''

அவனுடைய வார்த்தைகள் அவளுக்குப் புரிந்தன; அவன் ஏன் இப்படி, இப்போது பேசுகிறான் என்று புரியாமல் அவள் விழித்தாள்: ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

கிசுகிசுக்கும் குரலில் அவன் கூறினான்: ''அம்மாவுக்கு ரொம்பப் பசி..... இல்லை, சும்மா சொன்னேன்; அம்மாவும் நானும் தான் சாப்பிட்டோம்.... இல்லை, பொய், எனக்கும் ரொம்பப் பசி......!''

# குல விளக்கு

எல்லார்வி



“வெந்நீர் எடுத்து வைத்து ஆறிப் போகிறதென்று வாய் வலிக்கப் பல முறை சொல்லியும் குளிக்க வராமல் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஆபீசுக்கு நேரமாகவில்லையா?” என்று கேட்டுக் கொண்டே முன்புற அறைக்கு வந்தாள் பங்கஜம். மறு கணத்தில் நெருப்பை மிதித்ததுபோன்ற பதை பதைப்பை அடைந்தாள்.

அவன் சாய்வு நாற்காலியில் சோர்ந்து சாய்ந்து கிடந்தான். கண்ணிலே நீர் துளும்பிக் கொண்டிருந்தது; கையிலே இரண்டு கடிதங்கள் இருந்தன. பங்கஜம் மெல்ல நடந்து அவனை அணுகினாள். “என்ன?....” என்று மிகுந்த கலவரத் துடன் கேட்டாள்.

சுந்தரம் கடைக்கண்ணில் துளித்து நின்ற நீர் முத்தை விரலால் சுண்டி எறிந்தான். கடிதங்களை அவளிடம் நீட்டினான். ஒன்று கடிதம்; மற்றொன்று திருமண அழைப்பிதழ். பார்த்த மாத்திரத்தில் விவரம் புரிந்துகொண்ட பங்கஜம் நீண்ட பெருமூச்சுடன் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்.

“......சித்தப்பாவுக்கு, நீலா அநேக நமஸ்காரம். விவரங்களை ஏற்கனவே தாத்தா உங்களுக்கு எட்டச் செய்திருக்கிறார். இத்துடன் பத்திரிகை வருகிறது. ‘ஆடு மலை ஏறி மேய்ந்தாலும் குட்டி தோளுக்கிடம்’. நீங்களும் சித்தியும்தான் கன்னிகா தானம் செய்துகொடுக்க வேண்டுமாம். சாத்திரம், முறை என்பன ஒருபுறம் இருக்க, வேறு வழியில்லை என்பதுதான் மிக முக்கியம். கைவிட மாட்டீர்கள் என்று நம்புகிறேன். உடனே சித்தியுடன் இங்கே வந்தால் மிகமிக மகிழ்ச்சியடைவேன். கல்யாணத்துக்குப் புறப்படும்போது வந்து சேர்ந்து கொண்டாலும் சந்தோஷம்தான். கடைசிப் பட்சமாகத் திருப்பதித் திருமலையில் கலந்து கொண்டாலும் சரிதான். உங்கள் மன நிலையை அனுசரித்து, சௌகரியங்களை உத்தேசித்து எப்படி வேண்டுமானாலும் செய்யுங்கள். மற்றவை நேரில். நமஸ்காரம்.

— நீலா.”

படித்துக் கொண்டு வருகிறபோதே பங்கஜத்தின் கண்களில் நீர் வளையமிடத் தொடங்கிற்று.

“என்ன செய்யப் போகிறீர்கள்?”

“என்ன செய்யலாம்?”

“என்னைக் கேட்டால்?....நான் எதற்கும் தயார். குழந்தை எழுதியிருப்பதைப் பார்த்தால் இப்பொழுதே பறந்துபோய் அவள் கவலையையும் கண்ணீரையும் துடைத்துவிட வேண்டும் போலிருக்கிறது. ஆனால் ‘மரம் நல்லது முகடு பொல்லாத தாக இருக்கிறதே!”

“அதைப் பற்றித்தான் நானும் யோசிக்கிறேன். முகூர்த்த நேரம் என்றால் அது ஒருமாதிரி. நாலு பேர் முன்னிலையில், நல்ல வேளையை எண்ணிப் பெரியவர் வாயை மூடிக் கொண்டிருப்பார். அங்கே முன்னதாகவே போனால் ஜாடைஜாடையாக ஏதாவது பேசி......”

“உங்களுக்கோ மூன் கோபம். பேச்சு முற்றி விரசமானால்...... அந்தக் குழந்தையின் கண்ணீர் தான் பெருகும்.”

“சரி, பலப் பல யோசிப்பானேன்? திருப்பதியில் சந்திப்பதாக நீலாவுக்கு எழுதி விடுகிறேன். அவள் நிம்மதியாக இருக்கட்டும்.”

சுந்தரத்தின் பேச்சைப் பங்கஜம் கவனிக்கவில்லை. அவள் நினைவு எங்கோ ஓடியிருந்தது. எங்கோ பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். “என்ன யோசனை செய்கிறாய்?” என்று அவன் கேட்டான்.

“ஒன்றும் இல்லை. போஸ்ட்மாஸ்டர் பூவராகன் சொன்னதிலிருந்து இந்த ராமசாமிக்கு முப்பத்தைந்து வயதுக்குக் குறையாது என்று தோன்றுகிறது. தோற்றமும் திருப்தியாக இராது என்றார். சொத்து இல்லை; வருவாயும் குறைவு. இருந்திருந்து பலியிடுவது போல் அந்தக் குழந்தையை இப்படியா கொண்டு போய் ....”

சுந்தரம் நெடுமூச்செறிந்தான். “அந்தப் பெண்ணின் தலைவிதி அது என்று இருக்கவேண்டியதுதான். இல்லையானால் என் முயற்சிகளெல்லாம் படுதோல்வி அடைவானேன்?” என்றான்.

“சுந்தரம்!....” என்று வாயிற்புறத்திலிருந்து குரல் வந்தது. பங்கஜம் சட்டென்று எழுந்து உள்ளே சென்றாள். முரளீதரன் சாளரத்தின் வழியே எட்டிப் பார்த்தான். உடனே அவன் முகம் மலர்ந்தது. “நல்ல வேளை! எங்கே ஆபீசுக்குப்

போய் விட்டாயோ என்று கவலைப்பட்டுக் கொண்டே வந்தேன்'' என்றவாறு அறைக்குள் வந்து நாற்காலியில் அமர்ந்தான்.

''எனக்கு ஓர் உபகாரம் செய்கிறாயா, முரளி? உன்னைப் பார்க்க நானே வரவேண்டும் என்று நினைத்தேன்; நீயே வந்துவிட்டாய். லீவு லெட்டர் தருகிறேன். ஆபீஸில் அதைச் சேர்த்து விடு.''

முரளி கலகல வென்று சிரித்துக்கொண்டே சட்டைப் பையிலிருந்து கடிதம் ஒன்றை எடுத்துச் சுந்தரத்திடம் கொடுத்தான். அதைப் பிரித்துப் பார்த்த சுந்தரம், ''பேஷ்! உன் லீவு லெட்டரைத் தர நீ என்னைத் தேடி வந்தாயா?'' என்றான். பிறகு, ''என்ன விசேஷம், லீவு போடுகிறாய்?'' என்று வினவினான்.

'' கல்யாணக் காரியந்தான்.''

''உனக்கா கல்யாணம் ?''

''நீ ஒரு பக்கம்! என் தங்கையைப் பார்க்க வருகிறார்களாம். அது இருக்கட்டும்; நீ ஏன் அவசியமாக லீவு போடுகிறாய்?''

''சொல்கிறேன். அதற்கு முன் நீ ஒன்று செய்கிறாயா? என் சைக்கிளை எடுத்துக் கொள். சிரமத்தைப் பாராமல் கணபதி வீட்டுக்குப் போய் நம் இருவர் லீவு லெட்டர்களையும் சேர்த்து விட்டு வந்து விடு.''

முரளி சரியென்று தலையசைத்தான். சுந்தரம் எழுந்து பேனாவையும் காகிதத்தையும் எடுத்து வந்தான். அப்போது மேசை மேல் கிடந்த திருமண அழைப்பிதழை எடுத்து முரளி பிரித்தான்; பார்த்தான். அவன் முகம் மாறிற்று; கை நடுங்கிற்று. சுந்தரம் அவன் நிலையைக் கண்டான்.

''உன்..... அண்ணா பெண்ணுக்கா..... கல்யாணம்?'' — கேட்ட குரல் தழுதழுத்து ஒலித்தது.

சுந்தரம் ருன் கொட்டி விட்டுக் கடிதத்தை எழுதத் தொடங்கினான். முரளி அந்த அழைப்பிதழையே பார்த்துக் கொண்டிருந்தான். சுந்தரம் கடிதத்தை அளித்தான்; முரளி கிளம்பிச் சென்றான்.

''அண்ணா இருந்திருந்தால் அப்படி நடந்திருக்கும். அதன் பிறகும் நீலாவின் தாத்தா வார்த்தைகளைக் கொட்டாமல் இருந்திருந்தால்.......''

''உம். இனி அதையெல்லாம் எண்ணி என்ன, பேசி என்ன? இன்றைக்கு எட்டாம் நாள் நீலா, ராமசாமியின் மனைவி!..... சரி, எழுந்து வாருங்கள் குளிக்க. கண்ணீர் விட்டது தலையை வலிக்கிறது.''

''கொஞ்சம் பொறு. அல்லது நீ சாப்பிடு. முரளி இப்போது திரும்பி வருவான். அவனை அனுப்பி விட்டுத்தான் நான் வரவேண்டும்.''

சுந்தரம் சொல்லி முடிக்கவும் முரளி வரவும் சரியாக இருந்தது.

''கணபதி இருந்தாரா? கடிதங்களைக் கொடுத்து விட்டாயா?''

இயந்திரம் போல் தலையசைத்து விட்டு உட்கார்ந்தான் முரளி.



''நீ ஏனப்பா என்னவோ போல் இருக்கிறாய்? வருகிற போது உற்சாகமாய்ச் சிரித்துக் கொண்டே வந்தாய்: இப்பொழுது...?''

''ஒ...ன்...று...ம்.... இல்லை. நீ ஏதோ சொல்கிறேன் என்றாயே, என்ன?''

''என் லீவுக்குக் காரணம் கேட்டாய்; சொல்கிறேன் என்றேன்; சொல்ல ஒன்றும் இல்லை. மனசு சரியாக இல்லை. அவ்வளவுதான். உனக்கு ஓரளவு விவரம் தெரியும். இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்.''

சுந்தரம் தந்த கடிதத்தை முரளி பிரித்

---

தான். முத்துப் போன்ற எழுத்துக்கள் முதலில் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன. ரத்தினச் சுருக்கமாகச் செய்தியை அறிவித்திருந்ததும், கடிதத்தின் நடையும் அவன் வியப்பை அதிகரிக்கச் செய்தன; அவன் எதுவுமே பேசவில்லை.

"இந்த நேரத்தில் பழைய சம்பவங்கள் நினைவில் வந்து என் நெஞ்சை உலுக்குகின்றன. நீ அறிந்தது மிகச் சொற்பம்; அறியாதவை மிகப் பல....."

முரளி அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்; சுந்தரம் நிதானமாகச் சொல்லத் தொடங்கினான்.

வாசுதேவனும் சுந்தரமூர்த்தியும் ஒரே காம்பில் பூத்த இரு மலர்களைப் போன்றவர்கள். அவர்களிடையே தோன்றி வளர்ந்து வந்த அன்பையும் ஒற்றுமையையும் கண்டு ஊரே அதிசயித்தது. கண்ணேறு வராமல் இருக்க வேண்டுமென்று பெற்றோர் கவலைப் பட்டனர். வாசுவுக்குப் பிறகு இரண்டு பெண்கள்; சுந்தரம் கடைக்குட்டி. அதனால் தம்பிக்கும் அண்ணனுக்கும் இடையே பத்து வயது வித்தியாசம்.

சுந்தரம் கல்லூரியில் அடி எடுத்து வைத்த போது வாசுவுக்கும் மங்களத்துக்கும் திருமணம் நடந்தது. உடனே வாசுவுக்கு உத்தியோகமும் கிடைத்தது. மங்களத்தை அதிருஷ்டசாலி என்று புகழ்ந்தார்கள்.

மங்களம் அபூர்வ அழகி. சிறந்த குணவதி. செயலாற்றும் திறனில் வல்லவள். சிரித்துச் சிரித்து அனைவரிடமும் அடக்கமாகப் பழகியே எல்லோருக்கும் நல்லவளாக விளங்கினாள். குடும்பத்தில் சிறு பூசலுக்குக்கூட இடமின்றிக் கண்காணித்து வரலானாள். வந்த சில நாட்களுக்குள்ளேயே குடும்ப நிர்வாகத்தை அவளிடம் ஒப்படைத்து விட்டனர்.

சுந்தரத்துக்கு அவளிடம் முதலில் மரியாதை இருந்தது; பின்பு அன்பு தோன்றி வளர்ந்தது; முடிவில் பக்தி ஏற்பட்டு முதிரலாயிற்று. உட்காருவது, எழுவது முதல் அனைத்தும் அண்ணியின் ஆணையின்படியே தான் நடந்து வந்தான். வாசு மகிழ்ந்தான்.

திடீரென்று மங்களம் நோய்வாய்ப்பட்டாள். மருத்துவர்களே கவலை கொள்ளக் கூடிய நிலை ஏற்பட்டது. 'நல்ல பொருள் ஒட்டாமற் போய் விடுமோ!' என்று மாமனாரும் மாமியாரும் மாய்ந்தனர். வாசுவின் மன நிலை விவரிப்பில் அடங்காததாக இருந்தது. அவனாவது வேண்டாவெறுப்பாக உண்டு உறங்கி எல்லாம் செய்தான். சுந்தரம் உண்ணாமல் உறங்காமல் உலக விவகாரங்களை நினையாமல் தவம் கிடந்தான். வேளைப்படி நோயாளிக்கு மருந்து கொடுப்பது எல்லாம் அவன்தான்.

அவனுக்காக ஆண்டவன் இரங்கினான் என்றுதான் சொல்ல வேண்டும். மங்களம் பிழைத்தெழுந்தாள். சப்பாக்கு வைத்தாற் போல் இருந்த வீட்டில் கலகலப்பு மெல்ல இடம் பெற்றது. ஆனால் நஷ்டஈடு போல் சுந்தரம் தேர்விலே தோல்வி பெற்றான். இரவும் பகலும் விழிப்போடு நோயாளிக்குப் பணிபுரிந்ததாலும் கவலையில் மூழ்கிப் படிப்பைக் கவனியாததனாலுமே அவன் தோல்வியுற்றான் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

அடுத்த ஆண்டில் மங்களம் தாயானாள்.

சுந்தரம் தேர்விலே வெற்றி பெற்றான். உடனடியாக உத்தியோகமும் அவனுக்குக் கிடைத்தது. குடும்பம் மகிழ்ச்சியில் திளைக்கத் தொடங்கிற்று.

குழந்தை நீலா பெற்றோரைப் போலவே அழகிலும் அறிவிலும் சுடர் விட்டு ஒளிர்ந்தாள். சுந்தரம் அலுவலக நேரம் தவிர மீதிப் போதெல்லாம் குழந்தையைத் தூக்கிக் கொஞ்சி விளையாடுவதிலேயே கழித்தான். பல இடங்களுக்குத் தூக்கிச் செல்வது, விரும்புகிற பொருள் எதுவானாலும் உடனே வாங்கிக் கொடுப்பது முதலிய செயல்களிலே அவன் இன்பம் கண்டு வந்தான்.

அவனை எண்ணி அந்த வீட்டைச் சூழும் பெண்ணைப் பெற்றவர் எண்ணிக்கை நாளுக்கு நாள் மிகுந்துகொண்டே போயிற்று. அவன் தன் திருமணம் பற்றி எண்ணவே யில்லை. மற்றவர்கள் எண்ணினார்கள், முயன்றார்கள்; ஒன்று பொருந்தினால் ஒன்று பொருந்தவில்லை.

ஒரு நாள் அவனுக்காகப் பெண் பார்க்க ஓரிடத்துக்குப் போய் வந்தார்கள். மங்களம் குதூகலத்தோடு மைத்துனனை அணுகினாள்; "எமன் கையை எட்டுகிற தறுவாயில் என் உயிரை மீட்டு என் வாழ்வை நிலைக்கச் செய்தீர்கள் அல்லவா? அதற்காக இணையற்ற பரிசு ஒன்று தர வேண்டும் என்று தேடிக் கொண்டேயிருந்தேன்; இன்றுதான் கண்டேன்" என்று கூறினாள். சுந்தரம் தலை குனிந்து முறுவல் புரிந்தான்.

"அப்பாவும் அம்மாவும்கூட என்னவோ ஒன்றிரண்டு சொன்னார்கள். நான் அடித்துப் பேசி உறுதி செய்து விட்டேன். நீங்கள் பங்கஜத்தைப் பார்த்தீர்களோ, பசி தாகத்தையெல்லாம் மறந்து விடுவீர்கள்; அவளைக் கைப்பிடித்ததும் நீலாவைக் கூட மறந்து..."

"வேண்டாம்; அப்படிப்பட்ட பெண் எனக்கு வேண்டவே வேண்டாம்!"

வாசுவும் மங்களமும் சிரித்தார்கள். "பேச்சுக்கு ஏதோ சொன்னால் நீ என்னடா?" என்றான் வாசு.

சுந்தரத்துக்கும் பங்கஜத்துக்கும் திருமணம் நடந்தது. முதல் வேலையாக அவன் அவளுக்கு உபதேசம் செய்தான். மங்களம், வாசு, நீலா இவர்கள் சம்பந்தமாகத் தன் மனோபாவத்தை விளக்கி, தன்னைப் பின்பற்ற வேண்டும் என்றான்.

பங்கஜம் முறுவலித்தாள். "இதற்கு நீங்கள் மேற்கொண்ட முயற்சி தேவையற்றது. இந்த இடம் நிச்சயமானதுமே ஒரு வெளி மூலம் உங்கள் போக்கு எங்களுக்கு எட்டி விட்டது. அப்போதே நான் உங்கள் போக்கை மானசிகமாகப் பின்பற்றத் தொடங்கி விட்டேன்" என்றாள்.

"சபாஷ்!" என்று அவள் கையைக் குலுக்கின அவன், மகிழ்ச்சிப் பரவசத்தில் மூழ்கினான்.

சில மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் தலைவலி என்று வாசு நடுப்பகலில் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பினான்; படுத்தான்; காய்ச்சல் கண்டது; சிகிச்சை நடந்தது; நாட்கள் சென்றன. நோய் படியவில்லை; வர வர மேலோங்கிற்று. இப்போது மனைவியையும் துணையாக்கிக் கொண்டு சுந்தரம்

நோயாளிக்குப் பணி புரிந்து வந்தான். ஆனால்......

இம்முறை ஆண்டவன் அவனுக்காக இரங்கவில்லை; முன்னிலும் கடுமையாக அவன் இயற்றிய தவம் பலிக்கவில்லை.

'...என்ன இருந்தாலும் அவன் சிறுக; மேலும் மனம் ஓய்ந்து, புலன் ஓய்ந்து ஒரு புறமாக விழுந்து கிடக்க இது இடம் அன்று.''

மங்களத்தின் தந்தை கைலாசம் இப்படிச் சொல்லவே பெரியவர்கள் இணக்கமாகத் தலை யசைத்து விட்டனர். ஆனால் சுந்தரம் குறுக்கிட்டுத் தடுத்தான். ''நீலாவைப் பிரிந்து என்னால் இருக்கவே முடியாது!'' என்றான். அவன் தாயார் அவனைச் சைகை காட்டி அப்பால் அழைத்துச் சென்றாள். ''இப்படி ஓர் அசட்டுப் பிள்ளை உண்டா? ஊர் வாய், முன்பே மென்று கொண்டிருந்தது. இப்போது அப்பட்டமாகவே பட்டம் கட்டத் தொடங்கி விடும். அவள் போகட்டும். நீ வாயை மூடிக் கொண்டிரு!'' என்றாள்.

''சிவ சிவா!'' என்று இரு செவிகளையும் இறுகப் பொத்திக் கொண்டான் சுந்தரம். பொறி கலங்கின உணர்வில் கணப் போது அசைவற்று நின்றான். பிறகு மளமள வென்று படிகளில் ஏறி மாடிக்குச் சென்றான். குப்புற விழுந்து குமுறிக் குமுறி அழலானான்.

கீழே பிரிவினை நடந்து கொண்டிருந்தது. முன்புற ஹால் முழுதும் மங்களத்துக்குரிய பித்தளை, வெள்ளி, ஈயப் பாத்திரங்கள் நிறைந்திருந்தன. துணிமணிகள் ஒருபுறம்; தட்டுமுட்டு ஒருபுறம்.

''உம்; எல்லாம் சரி பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றார் மங்களத்தின் மாமனார் கங்காதரன்.

''இவையெல்லாம் சரிதான். இவை என்ன, ஆயிரமா, பதினாயிரமா? நான் மங்களத்துக்குப் போட்ட நகைநட்டுகள் எங்கே?''

''அவையெல்லாம் விற்று அவனுக்கே வைத்தியச் செலவு......''

''ஹா! இது தெய்வத்துக்கு அடுக்குமா?'' கைலாசம் படபடத்தார்; கங்காதரன் சளைக்கவில்லை.

''ஆறாயிரம் ரூபாய் மங்களத்தின் நகைகள் மூலமும் வாகனின் இன்ஷூரன்ஸ் மூலமும் சேர வேண்டும்'' என்றார் கைலாசம்.

''தயா பைசாகூட இல்லை'' என்றார் கங்காதரன். ''நீங்கள் உரிமை கொண்டாட இங்கு எதுவுமே இல்லை; நாங்களாகப் பார்த்து, அந்தக் குழந்தைக்கு, தயவாக ஏதாவது செய்யலாம். அதற்கு இடமின்றி நீங்கள்தாம் 'சட்டி கட்டதும் கைவிட்ட'தும் போல் தாயையும் குழந்தையையும் அழைத்துப் போகிறீர்கள். போங்கள். வீணுக்கு ரகளை செய்தால் மானக் குறைவு இருவருக்கும் சமம்தான்'' என்று கூறி விட்டு அவர் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டார்.

கைலாசம் அடிபட்ட பறவையைப் போல் படபடத்து வார்த்தைகளைப் பொரிந்து தள்ளினார். யாரும் எதிர்மூச்சு விடவில்லை. ''எதற்கப்பா வீணுக்குத் தொண்டைச் சேதம்? கிளம்புங்கள்'' என்று அருகில் வந்து மெதுவாகச் சொன்னாள் மங்களம். கைலாசம் போய் வண்டிகொண்டு வந்தார். சாமான்கள் பெரிய வண்டியில் ஏறின. மங்களம் அனைவரிடமும் சொல்லிக் கொண்டு சின்ன வண்டியை அணுகினாள். கைலாசம் திடீரென்று ஏதோ எண்ணியவராய்ப் படபடவென்று மாடிக்கு ஏறினார். கூடவே நீலாவும் சென்றாள்.

அருகில் காலடி ஓசை கேட்டு எழுந்து உட்கார்ந்த சுந்தரம் கைலாசத்தைப் பார்த்ததும், ''வாருங்கள்'' என்றான். நீலாவை நோக்கி இரு கைகளையும் நீட்டினான். அவள் நீட்டிய கரங்களிடையே பாய்ந்தாள். சுந்தரம், சிறுமியை மார்போடு அணைத்து உச்சி மோந்து முகத்தோடு முகம் பதித்தான்.

''உன் அப்பா போ என்று சொல்லி விட்டார். நீ வா என்கிறாய். தலை இருக்க வால் ஆடலாமா? அப்படி ஒரு பொறுப்பு உனக்கு இருக்குமானால் கீழே இவ்வளவு அமளி நடக்கிறபோது நீ ஒதுங்கி இப்படி மேலே வருவாயா? போகட்டும்; எல்லாம்...''

சுந்தரம் மெல்லக் குறுக்கே பேசினான்: ''படபடக்காதீர்கள் மாமா. வாகவும் நானும் இருந்த நிலை உங்களுக்குத் தெரியும். பெரியவர்கள் ஏதோ ஒரு மாதிரி நடந்து கொள்கிறார்களாக்கும். போகட்டும். நான் பிறகு வருகிறேன். குழந்தை நீலா—''

இப்போது கைலாசம் குறுக்கிட்டார்: ''என்ன?.... என்ன சொன்னாய்? ''கல்யாணத்துக்கு இல்லாத பூசணிக்காய் பந்தலில் கட்டி ஆடிற்றாம். ரகசியமாக வந்து உதவு

## தந்தையைப்போல் தனயன்...

ஆம், சில விஷயங்களில்தான்...முக்கியமான சில
வற்றிலோ? ஊஹூம்! ராமன் தன் தந்தையைப்போல்
ஒரு விவசாயியாகத்தான் இருப்பான். ஆனால் அவன்
நிலத்தை உழுது பயிரிடும் விதமே வேறுதான். தரத்தில்
உயர்ந்த விதைகளையே விதைப்பான். விஞ்ஞான ரீதியில்
மாற்றி மாற்றிப் பயிரிடுவான். நீர்ப்பாசன வசதிகளை
நன்கு பயன்படுத்துவான். ராலீஸ் தயாரிப்பதுபோன்ற
சமநிலை உரக்கலவைகளைக்கொண்டு தனது நிலங்களை
வளப்படுத்துவான். ராலீஸ் 'மரம் மார்க்' உரங்கள்
அமோக விளைச்சலைத் தருகின்றன. வளம் மேலும்
பெருக, டாடா-பைஸன் பூச்சி மருந்துகளைக்கொண்டு
பயிரைப் பாதுகாருங்கள். இரண்டுமே
சுலபமாகக் கிடைக்கின்றன.

**TATA-FISON**
**PESTICIDES**




**ராலீஸ்(இந்தியா)லிமிடெட்**

இந்தியா முழுதும்



# மானேர்ஸ்
# கிரைப் மிக்ஸ்சர்
# கொடுத்து



**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்** அஜீரணத்தைத் தடுக்கிறது. அதிலும் குறிப்பாக குழந்தைகளுக்குப் பற்கள் தோன்றும்போது பெருமளவில் உதவுகிறது.

குடலில் ஏற்படும் திருகுவலி போன்ற வயிற்றுவலி சம்பந்தமான தொல்லைகளைப் போக்கி, சுகமான நிலையை உண்டாக்குகிறது.

வயிற்று வீக்கங்களை-உப்புசங்களைப் போக்கி, காற்று பிரிவதற்கு உதவுகிறது.

உடல் நலத்தைப் பாதுகாத்து, குழந்தை அமைதியுடன் உறங்கவும் உறுதுணைபுரிகிறது.

# மீண்டும்
# புன்னகை
# தோன்றக்
# காணுங்கள்





ஒரு நாளைக்கு இருமுறை வீதம்
ஒவ்வொரு நாளும்
**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்**
கொடுத்து வந்தால், உங்கள் குழந்தை
உற்சாகத்துடனும், உடல்
நலத்துடனும் காணப்படும்.



**GEOFFREY MANNERS & COMPANY LIMITED**

ASP/GM 18 TM.

கிறாயோ? தர்மம் செய்யப் போகிறாயோ? குழந்தை குழந்தை என்பதெல்லாம் உதட்டளவிலேதானே? இல்லா விட்டால் ஆண் மகனை நீ உரிமை உள்ளதை ஒதுக்கிக் கொடுக்க மாட்டாயா? வேண்டாம்; நீ என் வீடு தேடி வரவும் வேண்டாம்; உதவவும் வேண்டாம்!''

குழந்தை சித்தப்பாவைக் கட்டிக் கொண்டு அழுதாள். கைலாசம் அவள் கரத்தைப் பிடித்து வெடுக்கென்று இழுத்து வண்டியினுள் தள்ளித் தாமும் ஏறிக் கொண்டார். வண்டி சென்றது; சுந்தரம் மாடியிலிருந்து பார்த்து விம்மினான். கீழே இருந்தவர்கள் பெருமூச்செறிந்தார்கள்.

சுந்தரம் எந்த நேரமும் நீலாவின் நினைவாகவே இருந்தான்.

பங்கஜம் அடிக்கடி நோய்வாய்ப்பட்டாள். சில காலத்துக்குப் பின் கங்காதரனும் அவர் மனைவியும் குடும்பப் பொறுப்பைச் சுந்தரத்திடம் விட்டு ஒருவர்பின் ஒருவராக மறைந்தனர். நோயாளி பங்கஜத்துடன் சுந்தரம் அனுவும் நிம்மதியற்ற வாழ்விலே உழன்று வந்தான்.

நீலா வளர்ந்தாள்; தொடக்கத்தில் கல்வி முடிந்து உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தாள்: மின்னற் கொடி போல் ஒளிர்ந்தாள்.

'நீலாவின் படிப்பு நிறுத்தப்பெற்றது' என்று கேள்விப்பட்டபோது அவன் வருந்தினான். 'நான் உதவுகிறேன்; அவள் தொடர்ந்து படிக்கட்டும்' என்று எழுதினான். 'பிச்சை புக நேரினும் உன் உதவி தேவை இல்லை. இனி கடிதம் எழுதாதே!' என்று பதில் கொடுத்தார் கைலாசம். அதைக் கண்டு சுந்தரமும் பங்கஜமும் வருந்தினர்.

மங்களத்தின் தாய் காலமாகி விட்டாள்; கைலாசம் முதுமையினால் தடுமாறினார்.

தம் பொறுப்பை நிறைவேற்றி முடிக்க நீலாவுக்குத் திருமண ஏற்பாடு செய்ய முயல்கிறார் என்று முதலிலும், இல்லாமை காரணமாக மட்டமான மனிதரை நீலாவுக்கு நிச்சயித்து விட்டார் என்று பிறகும் கேள்விப்பட்டபோது சுந்தரம் துடிதுடித்தான். இப்போது கன்னிகாதானப் பொறுப்பை முன்னிட்டு, மகள் கடிதம் எழுதியிருக்கிறாள்.

"முரளி! இந்தக் கலியாணத்தை முன்னிட்டு நீ என்னுடன் திருப்பதிக்கு வர வேண்டும்; தெரிந்ததா?''

''நானு?....நான் எதற்கு? என் அப்பா ஏதாவது சொல்வாரேயென்று....''

''எதற்கு என்று ஒன்று? தனியாய்ப் போக எனக்கு என்னவோ போல் இருக்கிறது. பேச்சுத் துணைக்கு எனக்கு அங்கே வேறு யார்?''

''இதே கலியாணத்துக்கு என் அப்பாவும் திருப்பதி போகிறார்.''

''அப்படியா?......''

''என்ன, புதிதாகத் திடுக்கிடுகிறாயே! என் அப்பாவும் அந்தக் கைலாச மாமாவும் சில காலம் ஒரே அலுவலகத்தில் சேர்ந்து வேலை பார்த்தவர்கள் என்றும், இந்த ஊரில் சந்திக்கநேரிலிருந்து இருவரும் பழைய நண்பர்களாக இருந்து வருகிறார்கள் என்றும்.....''

''முன்பே சொல்லியிருக்கிறாய்; நான்தான் அதை மறந்து விட்டேன்.''

''சரி, நான் வரட்டுமா?''



''ஏன், அவங்க தந்திக் கம்பி மேலே நடக்கிறாங்க!''

''பின்னே கம்பியில்லாத் தந்தி மேலேயா நடக்க முடியும்?''

''போய் வா. எப்படியும் திருப்பதிக்கு வர வேண்டும்.''

''முயலுகிறேன்.''

முரளீதரன் விடைபெற்றுச் சென்றான்.

திருப்பதித் திருமலையில் நீலாவின் திருமணம் நிகழவிருக்கும் கல்யாண நிலையத்தை நோக்கிப் பங்கஜம், சுந்தரம், முரளி மூவரும் போய்க் கொண்டிருக்கையில் முரளி திடீரென்று சிரித்தான். சுந்தரம், ''என்ன?'' என்று வினவினான்.

''எங்கள் குடும்பத்தில் நாங்கள் நால்வர்: என் அப்பா, அம்மா, நான், என் தங்கை. வேறு நெருங்கிய சுற்றம் எங்களுக்கு இல்லை. அந்த வழியால் மூவரும், இந்த வழியால் ஒருவருமாக எங்கள் குடும்பமே இந்தக் கலியாணத்துக்குக் கூடி விட்டது'' என்றான் முரளி.

குறிப்பிட்ட இடத்தை அடைந்து உள்ளே போகிற போது சுந்தரத்தின் உடம்பு படபடத்தது; நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. எத்தனை காலத்துக்குப் பிறகு இந்தச் சந்திப்பு!

கூடத்தில் மங்களம் எதிர்ப்பட்டாள். சுந்தரம் கையிலிருந்த பெட்டியைக் கீழே போட்டுவிட்டு நெடுஞ்சாண் கிடையாக விழுந்து அவளை வணங்கினான். பங்கஜமும் அவனைப் பின்பற்றினாள்.

''வா பங்கஜம்'' என்று மங்களம் அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். சுந்தரமும் முரளியும் அவர்களைத் தொடர்ந்தனர்.

அறை ஒன்றில் நீலா யாருடனோ என்னவோ பேசிக் கொண்டிருந்தாள். சுந்தரத்தைக் கண்டதும் தட்டென்று எழுந்து நின்றாள்.

பிறுபிறுவென்று வளர்ந்து விட்ட அவளை வைத்த கண் வாங்காமல் பார்த்தபடி வாய் அடைத்து நின்றான் சுந்தரம்.

''நமஸ்காரம் செய் நீலா.'' — மங்களம் மெதுவாகச் சொன்னாள்.

நீலா நமஸ்கரித்தாள். எழுந்து நின்றவள், கையில் முகத்தைப் பதித்துக் கொண்டு விம்மினாள். ''கல்யாண வேளையில் கண்ணீர் விடலாகாது அம்மா!'' என்றான் சுந்தரம்.

''கல்யாணம் இல்லை, சித்தப்பா....!'' நீலா விசித்தாள்.

''என்ன.... கல்யாணம.... இல்லையா..? ஏன்.....?'' என்று கேட்டான் சுந்தரம்.

நீலா பேசமுடியாமல் தவித்தாள். சிறிது தூரத்தில் தாழ்வாரத்தில் நாலைந்து ஆட-

வர்கள் கூடி என்னவோ பேசிக் கொண்டிருப்பதைக் கண்ட சுந்தரம் அருகே சென்றான். முரளியும் அவன் பின்னோடு செல்லத் தொடங்கினான். போய்க் கொண்டே திரும்பிப் பார்த்தான். அதே சமயத்தில் நீலாவும் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.



''இது வரையிலும் நீங்கள் எத்தனை தடவை டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்திருக்கிறீர்கள்?''

''அட! நான் ரயிலை விட்டுக் கீழே இறங்கினால் தானே எண்ணுவதற்கு. நான் ரயிலை விட்டுக் கீழே இறங்கினதே இல்லையே?''

மணமகனைச் சேர்ந்தவர்கள் சிலர் வேறு வேறு ஊர்களிலிருந்து வந்திருந்தார்கள். மணமகன் இன்னும் வரவில்லையே என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கையில் 'டிரங்கால்' வந்தது. கைலாசத்துக்குத்தான். ''புறப்படுகிற நேரத்தில் மணமகனுக்குத் திடீரென்று உடற் கோளாறு. மருத்துவ மனையில் சேர்த்திருக்கிறது. நினைவு இல்லை. பிழைக்கலாம் என்றாலும் இந்த முகூர்த்தத்தில் மணம் நிகழ்த்த இயலாது'' என்ற செய்தி இடிபோல் தாக்கிற்று.

விவரம் அறிந்த உடனே, ''பெண்ணின் பாட்டனார் எங்கே?'' என்று சுந்தரம் வினவினான்.

''அதோ, அந்த அறையில். அவருக்கு மயக்கம்'' என்றார் ஒருவர்.

சுந்தரம் அருகே சென்றான். அறையை அணுகுகிற போது உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

'' 'சும்மா கிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி' என்பது போல் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சேர்த்த பணம் இப்படிப் பாழாக வேண்டும் என்பது என் தலையெழுத்து; அந்தத் தகப்பன் இல்லாக் குழந்தையின் கண்ணீர் மாளாத கண்ணீர் என்பது அதன் தலைவிதி. இல்லாவிட்டால் நீர் அப்படி நிர்த்தாட்சிண்யமாக உதறியிருப்பீரா? ஜாதகங்கள், சகுனங்கள், மனப் பொருத்தம் திருப்திகரமாக இருந்தும் பணப் பொருத்தம் ஒன்றை எண்ணி என்னைக் கண் கலங்கும்படி விட்டு விட்டீரே!....''

கைலாசம்தான் இப்படிப் பேசினார். நிலை வரை சென்ற சுந்தரம் சற்று நின்றான்; பேச்சைக் கேட்டான்; உள்ளே எட்டிப் பார்த்தான்; உடனே திடுக்கிட்டான். கைலாசத்தின் எதிரே முரளியின் தகப்பனார் பசுபதி தான் குற்றவாளி போல் அமர்ந்திருந்தார். அறைக்குள் அவர்கள் தவிர யாரும் இல்லை.

பேச்சு முழுவதையும் கேட்ட சுந்தரம் முரளியைத் திரும்பிப் பார்த்தான். அப்போது பசுபதி பேசினார்.

''அதையெல்லாம் இப்போது பேசி என்ன கைலாசம்? என் மனமும் வேதனைப் படத்தான் செய்கிறது......''

முரளி சுந்தரத்தின் கையைப் பற்றி அப்பால் அழைத்துச் சென்றான். ''முன்பே சொல்ல நினைத்தேன் சுந்தரம். கூச்சம் குறுக்கிட்டு என் வாயைக் கட்டி விட்டது. என் அப்பா 'ஐயாயிரம்' என்றார்; அவர் 'இரண்டாயிரம்' என்றார். பேச்சு நின்றது'' என்றான்.

மறு விநாடியில் சுந்தரத்தின் முகத்தில் புத்தொளி சுடர் விட்டது. ''நீலாவை மணக்க உனக்கு இஷ்டம் தானே?'' என்று கேட்டான். தலை குனிந்த முரளி, ''என் இஷ்டத்தில் என்ன இருக்கிறது?'' என்றான்.

''நீலாவையும் கேட்டு விடுகிறேன்.''

''கேட்கவே வேண்டாம்; எனக்கே அது தெரியும்...''

அதற்கு மேல் சுந்தரம் அங்கே நிற்கவில்லை. நாலே எட்டில் அந்த அறையை அடைந்தான். கைலாசம் அவனை நிமிர்ந்து பார்த்தார். 'வா' என்கிற பாவனையில் தலையசைத்தார்.

சுந்தரம் பசுபதியின் எதிரே அமர்ந்தான். ''ஐயாயிரம் தந்தால் நீங்கள் எங்கள் நீலாவை மருமகளாக ஏற்கத் தடையில்லையே? நாளை முகூர்த்தத்தில் கலியாணத்தை நடத்தி விடலாம் அல்லவா?'' என்றான்.

பசுபதி பொக்கை வாயை மலர்த்தி, ''பேஷாக!'' என்றார்.

சுந்தரம் தன் மனைவி இருக்குமிடம் சென்றான். பெட்டியைத் திறந்தான். கைக் காவலாக இருக்கட்டும் என்று ஆயிரம் ரூபாய் கொண்டு வந்திருந்தான். செக் புத்தகத்தை எப்போதும் உடன் வைத்துக் கொள்வது அவன் வழக்கம். ஐயாயிரத்துக்குப் பசுபதி பேரில் செக் எழுதினான். செக், ரொக்கம் இவற்றுடன் மீண்டும் பெரியவர்கள் இருந்த அறைக்குச் சென்றான். செக்கைப் பசுபதியிடமும், ரொக்கத்தைக் கைலாசத்திடமும் கொடுத்தான். இரு முதியவர்களும் வாலிபம் திரும்பப் பெற்றவர்கள் போல் ஆனார்கள்; இருக்கையை விட்டு எழுந்தனர்.

''அன்று நான் மங்களத்தின் சார்பில் ஆறாயிரந்தான் கேட்டேன்; இன்று நீ அதைக் கொடுத்து விட்டாய்.''

''அந்தப் பேச்சு இப்போது எதற்கு மாமா? அன்று நீங்கள் பதற்றப்படாமல் இருந்திருந்தால், 'என் வீட்டுக்கு வராதே; உன் உதவி வேண்டாம்' என்று நேரிலும் கடிதம் மூலமும் எனக்குத் தடை உத்தரவு போடாமல் இருந்திருந்தால் எப்படி எப்படியோ எல்லாம் நடந்திருக்கும். ஆறாயிரத்துக்கு அன்று முதல் இன்று வரை வட்டி உண்டல்லவா? அதையும் பிறகு சேர்ப்பிக்கிறேன். எப்படியோ எங்கள் குல விளக்கு சுடர்விட்டு ஒளிர்ந்தால் சரி'' என்று சுந்தரம் கூறி முடிப்பதற்குள் கைலாசம் தொண்டையை அடைக்க, ''எனக்கும் குல விளக்கு அவள்தானே அப்பா?'' என்றார்.

''ஏன்? நாளை முதல் எங்கள் குல விளக்கும் அவள்தான்'' என்றார் பசுபதி.

# ஏழு வைட்டமின்கள் சேர்ந்தது, அமுல் பாலுணவு- அவை செய்வது என்னென்ன?

**வைட்டமின் ஏ**

தோலை மிருதுவாக வைத்துக்கொள்கிறது. கண்களை பிரகாசமாக்குகிறது; வளர்ச்சிக்கு உதவுகிறது.



**வைட்டமின் பி1**

நரம்புகளை உறுதிப் படுத்துகிறது; மார்பில் உள்ள தசைநார்களைப் பலப்படுத்துகிறது.



**வைட்டமின் பி2**

வாயின் ஆரோக்கியத் திற்கு இது அவசியம்.



**வைட்டமின் பி6**

தசை நார்கள் இளைப்பாற்றிக்கொள்ள உதவுகிறது.

**வைட்டமின் சி**

நோய் பரவாமலும், சொறி பிடிக்காமலும் தடுத்து நிறுத்துகிறது.





**வைட்டமின் டி**

எலும்புகளைப் பலப்படுத் துகிறது; பற்களை நல்ல முறையில் வைத்திருக் கிறது. பக்க ரோகங்களை யும் தடுக்கிறது.



**நியசினமைடு**

ஜீரணத்தை எளிதாக்கு கிறது. நரம்புகளை உறு திப்படுத்துகிறது; தோலை ஆரோக்கியமுடன் வைத்திருக்கிறது.

அமுல் பாலுணவில் 7 வைட்டமின்கள் சேர்ந்திருப்பதோடு சம அளவில் புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ் சத்துக்களும் கலந்துள்ளன. அமுல் சிறப்புவாய்ந்த உணவின் மதிப்பைப் பெற்றிருப்பதால் இக்காலத் தாய்மார்கள் இதையே தேர்ந்தெடுக்கிறார்கள். உங்கள் குழந்தைக்கு இது மிகச் சிறந்தது.

**அமுல்** பாலுணவில் உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள் உள்ளன.





ASP/ASF-33 TAM

# நிமிஷக் கதைகள்

பேய்கள் : ஊரில் லஞ்சப் பேய் ரொம்ப அதிகமாக இருக்குன்னு சொல்றீங்களே அதைக் காட்டிக் கொடுக்க முடியுமா ?



வந்தவன்: காட்டித் தாரேன். எனக்கு ஏதேனும் 'சம்திங்' கொடுப்பியா?''

ஃ ஃ ஃ

திருவல்லிக்கேணியில் பஸ் பிடிக்கும் பொழுது அவர்கள் இருவருக்கும் நேரமாகி விட்டது. பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும் ஒருவர், ''நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''நானா? திருநெல்வேலிக்கு. இங்கேயே மணி ஆறரை ஆகி விட்டது. ஆறே முக்கால் வண்டி கிடைக்குமோ, கிடைக்காதோ? நீங்கள் எங்கே போகிறீர்களோ?''

''நானா? நானும் திருநெல்வேலி எக்ஸ்பிரசுக்குத் தான் போகிறேன். என் கடிகாரத்தில் மணி ஆறேகால் தான் ஆகிறது. கிடைத்து விடும்.''

''உங்கள் கடிகாரத்தில் ஆறேகால் ஆகிறது என்றால் உங்களுக்குக் கிடைத்து விடும். என் கடிகாரத்தில் ஆறரை ஆகி விட்டதே !... எனக்கு எங்கே கிடைக்கப் போகிறது?'' என்று அங்கலாய்த்தார் அவர்.

ஃ ஃ ஃ

அந்தத் தம்பதிகள் அவசரம் அவசரமாகக் கடைக்குள் நுழைந்தனர். 'என்ன வேண்டும்?' என்று கேட்டார் கடைக்காரர்.

''இன்று...... சமஸ்தானத்து மன்னருக்குப் பிறந்த நாள். அவருக்குக் கொடுப்பதற்கு ஏற்ற பரிசாக ஒன்று வேண்டும்!'' என்றார் கணவர்.

''எத்தனை ரூபாயிலிருக்கலாம்?'' என்று கேட்டார் கடைக்காரர்.

''எவ்வளவுக் கெவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு குறைவான விலையில் இருக்க வேண்டும். ஆனால் பார்ப்போருக்கும் பளிச் சென்று பட வேண்டும் !'' என்றாள் மனைவி.

கடைக்காரர் சிறிது யோசித்தார். ''அதற்கு என்ன? கொடுத்தால் போயிற்று! அவர் மகுடத்துக்கு மெருகேற்ற ஒரு பாலிஷ் டப்பா வாங்கிப் போங்களேன். விலைக்கு விலையும் குறைவு; மகுடத்தையே பளிச்சிட வைக்கவும் செய்யும்!'' என்றார்.

ஃ ஃ ஃ

''பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்திலேதானே உன் வீடு இருக்கு ! என்டா, ரொம்ப



நாளா நீ பள்ளிக்குப் படிக்க வரல்லே ?''

''படிப்புக்கும் எனக்கும் ரொம்ப தூரம் சார்!''

ஃ ஃ ஃ

அது பெரிய கடை. எத்தனையோபேர் வேலை பார்த்து வந்தனர். அவர்களில் ஒருவன் பணத்தைத் திருடி விட்டான். திருடன் கையும் மெய்யுமாகக் கண்டுபிடிக்கப்படவில்லையே ஒழியத் திருடிய காசு செலவழிந்தபின் கண்டு பிடிக்கப்பட்டு விட்டான். கடை முதலாளி மற்றவர்களுக்கும் பாடமாக இருக்கட்டும் என்ற நோக்கத்தில், ''திருடியவனிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?'' என்று அவன் சக ஊழியர்களையே கேட்டார்.

''வேலையை விட்டு நீக்கி விடுங்கள்!'' என்றார் ஒருவர்.

''வேலையை விட்டு நீக்கினால் திருடிய பணம் வந்து விடுமா? வேலையிலேயே வைத்துக் கொள்ளுங்கள்! மாதாமாதம் சம்பளத்தில் பிடித்துக் கொள்ளலாம் !'' என்றார் இன்னொருவர்.

'' அவன் வாங்கும் சம்பளத்தைக் காட்டிலும் அவன் திருடியிருக்கும் ரூபாய் அதிகமாயிற்றே ! கடன் அடைவது எந்தக் காலம்?'' என்றார் மூன்றாமவர்.

''இதற்குக் கவலைப்படுவார்களா? பேசாமல் சம்பளத்தைக் கூட்டிப் போட்டுக் கொடுங்கள், முதலாளி!'' என்றான் திருடியவனே.

ஃ ஃ ஃ

டாக்டர் சங்கரன் எடுத்ததற்கெல்லாம் சள்ளென்று விழுவார்; வாய்க்கு வாய் வசவுதான் அவர் வாயிலிருந்து வெளி வரும். 'கழுதை எருமை மாடு, நாய்' என்றெல்லாம் வரும் நோயாளிகளைக்கூடத் திட்டுவார். அதனால் நாளடைவில் அவரிடம் நோயாளிகள் வருவது குறைந்து விட்டது. கம்பவுண்டர் தருணம் பார்த்து, ''டாக்டர்! நீங்கள் தராதரம் பார்க்காமல் வரும் நோயாளிகளைக் கூட வாயில் வந்தபடி திட்டுவதனால்தான் உங்களிடம் நோயாளிகள் வருவது குறைந்து விட்டது. திட்டுவதை நீங்கள் நிறுத்திக் கொண்டால் நல்லது!'' என்றான்.

''சரி, நீ சொல்றபடியே செய்கிறேன். இனி அந்தப் பன்றிகளைத் திட்டுவதில்லை'' என்றார் டாக்டர்.

ஃ ஃ ஃ

'' ஆலும் வேலும் பல்லுக்கு உறுதின்னு நீங்க முன்னே அந்தக் குச்சியைத் தானே உபயோகப்படுத்துவீர்கள்? இப்ப 'பிரஷை' உபயோகிக்கிறீர்களே ?''



''அப்ப என் பற்கள் வாயிலிருந்தது, இப்ப 'செட்டா' கையிலேதானே இருக்கு!''

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# மக்ளீன்ஸ்

உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!





## இவ்விதம் சோதியுங்கள்

1. உங்கள் நாக்கினுல் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!

